# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# திருமலையில் தங்குவசதி விவரங்கள்

## ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி மைய பரப்பு

| விடுதி மற்றும் குடில்கள் பெயர்கள் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| ஆம்ப்ரோ விருந்தினர் விடுதி | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1000-00 |
| (ஆ) சிறிய அறைத்தொகுதி-ஒன்று ... | 500-00 |
| பால குடீரம் | |
| (6 அறைத்தொகுதிகள்) ஒன்று ... | 500-00 |
| கோதாவரி சதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| கும்ப்ளே விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும ... | 250-00 |
| கோகுலம் விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| எச்.ஆர்.ஜி. | |
| (ஏ மற்றும் பி பகுதிகள) ... | 400-00 |
| ஹரிசதன் விருந்தினர் விடுதி | |
| (குளிர்சாதன வசதிகொண்டது) | |
| (அறைத்தொகுதி(1 to 7) ஒவ்வொன்றும்).. | 1000-00 |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள்... | 100-00 |
| (பெரிய அறைத்தொகுதிகள்) | |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதிகள (சிறிய.. அறைத்தொகுதிகள்) | 50-00 |
| ஹில் வ்யூ சொகுசு குடில்கள் ... | 100-00 |
| இந்திரா விருந்தினர் விடுதி | |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 500-00 |
| ஜகன்னாத பவன் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| மோடி பவன் | |
| (8 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 250-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| நாராயணகிரி குடில்கள் | |
| (17 அறைத்தொகுதிகள்)ஒவ்வொனறும் ... | 400-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி I ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி II ... | 100-00 |
| ராம் பகிச்சா விருந்தினர் விடுதி III ... | 100-00 |
| ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி | |
| (பிரதானமானது) | |
| (அ) பெரிய அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் இரண்டு ... | 1500-00 |
| (ஆ) மற்றைய 7 அறைத்தொகுதிகள் | |
| ஒவ்வொன்றும் ... | 1500-00 |
| ஸ்ரீ லக்ஷ்மி நிலையம் | |
| (3 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| ஸ்ரீ நிகேதன் | |
| (3 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 1000-00 |
| ஸ்ரீ நிவாசா நிலையம் | |
| (5 அறைகள்) ஒவ்வொன்றும் ... | 500-00 |
| சாந்தி சதன் | |
| (7 அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும்... | 500-00 |
| சிறப்பமைப்பு குடில்கள் ... | 400-00 |
| எஸ்.வி. விருந்தினர் விடுதி ... | 100-00 |
| (அ) மூலை அறைத்தொகுதி ... | 150-00 |
| ஸ்ரீவாரி குடீர் விருந்தினர் விடுதி ... | 2000-00 |
| (குளிர்சாதன வசதி கொண்டது) | |
| (அறைத்தொகுதி ஒன்று முதல் 4 வரை முழு விருந்தினர் விடுதியும்) | |
| சுராபுரம் தோட்டம் குடில்கள் | 250-00 |
| சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ... | 100-00 |
| வித்யாசதன் பெரிய அறைத் | |
| தொகுதி (ஒன்று) ... | 1500-00 |
| (அ) மற்றைய அறைத்தொகுதிகள் ... | 500-00 |
| (4 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் | |
| வராஹசுவாமி விருந்தினர் விடுதி ... | 100-00 |

### டி.பி. குடில்கள்

| | |
|---|---|
| (2 அறைத்தொகுதிகள்)ஒவ்வொன்றும் ... | 150-00 |
| தனி அறை ... | 30-00 |
| வெளிப்புற குடில்கள ... | 75-00 |
| டி.பி.சி.யில் சிறப்பமைப்பு குடில்கள் | |
| (அ) குடில் எண்கள்61 A, B | |
| (குடில்களுக்கு உள்ளே) ... | 400-00 |
| (ஆ) 57, 58, 60 A, B ... | 400-00 |
| (இ) 62A, B; 64Q, A, B; 65, A, B; 66, 67 69 A,B ... | 400-00 |
| மங்களகிணறு குடில்கள்(எம்.பி.சி.) ... | 75-00 |
| (அ) (2 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் ... | 150-00 |
| முழு குடில் எண். 31, A,B; 31 C,D; ... | 150-00 |
| வேலி வ்யூ குடில் (வி.வி.சி.) ... | 75-00 |
| (3 அறைத்தொகுதிகள்) | |
| ஒவ்வொன்றும் 44 AB; 47 AB; 50 AB ... | 150-00 |
| ஆழ்வார் ஏரி குடில்கள் (ஏ.டி.சி.) ... | 50-00 |
| ஏ.டி.சி. தனியறை (ஒவவொன்றும்) ... | 30-00 |
| அஞ்ஜனாத்ரி நகர் குடில்(ஏ.என்.சி.) ... | 15-00 |
| கருடாத்ரி நகர் குடில்(ஜி.என்.சி.) ... | 15-00 |
| சங்குமிட்டா குடில்கள(எஸ.எம்.சி.) ... | 15-00 |
| சேஷாத்ரிநகர் குடில்கள(எஸ்.என்.சி.) ... | 15-00 |
| ஹில்வ்யூ குடில்கள் | |
| (சாதாரணமானவை) ... | 15-00 |

(திருமலையில் தங்குவசதி கோரும் யாத்திரிகர்கள் ரூ. 100/-ஐ "Assistant Executive Officer, (Reception I) T.T.D., Tirumala" எனும் பெயரில் ஒரு வங்கி காசோலை மூலமாக, தங்கும் தேதி பற்றிய ஆங்கிலத்தில் எழுதப் பட்ட விவரங்களுடன்; மேற்குறிப்பிட்ட முகவரிக்கு, 30 நாடகளுக்கு முன்பேயே அனுப்புதல் வேண்டும்.)



குருமுகமநதீத்ய ப்ராஹ வேதாநசேஷாந்
நரபதிபரிக்லுப்தம் சுல்கமாதாதுகாம: ।
ச்வசுரமமரவந்த்யம் ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி ॥

[எந்த ஒரு பெரியாழ்வார் வல்லபதேவனென்கிற அரசனால் ஏற்படுத்தப்பட்ட பந்தயப் பொருளாகிய பொற்கிழியை அடைய எண்ணமுடையவராய், ஆசார்யமுகமாக ஒரு கல்வியையும் கற்காமலே பரதத்துவ நிர்ணயத்திற்கு வேண்டிய வேதங்களெல்லாவற்றையும் பகவான் அருளினால் எடுத்துரைத்தாரோ, தேவர்களினால் வணஙுகத் தகுந்தவரும் ஸ்ரீரங்கநாதனுக்கு நேராக மாமனாரும் பிராமண குலத்திற்குத் திலகம் போன்றவருமான அப்பெரியாழ்வாரை வணங்குகின்றேன்.]

--ஸ்ரீமந்நாதமுனிகள்

வாருங்கள்! காணுங்கள்!!

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஆலய தரிசனம்





திருப்பதி மற்றும் அதனைச்சுற்றியுள்ள முக்கிய திருக்கோயில்களை மிக எளிதில் பக்தர்கள் தரிசிக்கும் வண்ணம் தி.தி. தேவஸ்தானம் ஆலய தரிசனத்தை அறிமு கப்படுத்தியுள்ளது. ஒவ்வொரு நாளும் காலை 6 மணி, 10 மணி மற்றும் மாலை 3 மணி ஆகிய நேரங்களில் திருப்பதி இரயில் நிலையத்திற்குப் பினபுறம உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் இரண்டாவது தரும சத்திர வளாகத்திலிருந்து இதற்கெனறே சிறப்பு பேருந்துகள் புறப்படுகின்றன.

## காணும் ஆலயங்கள் :

1) ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.
2) ஸ்ரீ கல்யாணவேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில், ஸ்ரீனிவாசமங்காபுரம்.
3) ஸ்ரீ அகஸ்தீஸ்வரசுவாமி திருக்கோயில், தொண்டவாடா.
4) ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி திருக்கோயில், திருப்பதி.
5) ஸ்ரீ ஹரேராம ஹரேகிருஷ்ண திருக்கோயில், திருப்பதி.
6) ஸ்ரீ கோதண்டராமசுவாமி திருக்கோயில், திருப்பதி.
7) ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி திருக்கோயில், திருப்பதி.
8) வடடார விஞ்ஞான மையம், திருபபதி.

## பேருந்து கட்டணம் :

| | | |
|---|---|---|
| பெரியோர் | : | ரூ. 20/- (நபர் ஒருவர்க்கு) |
| சிறுர் | : | ரூ. 10/- (நபர் ஒருவர்க்கு) |

[சிறபபு தரிசன வசதியும் செய்துதரப்படும்.]







பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294

❊ ❊ ❊

தனிப்பிரதி ரூ. 4/-
வருடச்சந்தா ரூ. 48/-


*வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்*
*வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்*


**மலர் 29 ஜூலை - 1998 இதழ் 2**


| உள்ளுறை | பக்கம் |
|---|---|




**அட்டைப்பட விளக்கம்**

முன் அட்டை : ஸ்ரீ வேதவியாசர், சித்திரம்: திரு. ஜெகதீஷ்
பின் அட்டை : அலிபிரி முன் தோற்றம்..

# உங்களுடன்....

"தோ ன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று" எனும் வள்ளுவர் வாக்கிற்கிணங்க மனிதன் புகழொடு வாழ முற்படவேண்டும். புகழொடு வாழ்தலாவது தன்னை பிறர் இகழும்படிக்கு இல்லாமல், இறையன்போடு இல்லை என்பார்க்கு இல்லை எனாமல், தன்னால் முடிந்த பொருள் தானத்தையும், அதைவிட மேலான அறிவு தானத்தையும், அதைவிட மேலான இறையறிவு தானத்தையும் அளித்தலாகும். இங்ஙனம் முத்தானத்தையும் தன்னகத்தே கொண்டிருப்பவர்கள் இவ் உலகில் எத்தனைப் பேர் இருக்கக் கூடும்? விரல் விட்டு எண்ணும்படிக்கு அன்றோ அவர்கள் இருப்பது.

மனிதன் ஏனோ பரந்த மனப்பான்மையின்றி எல்லாம் தனக்கே வேண்டும் என்று எதனையும் யாவர்க்கும் ஈயாமல் இல்லற தர்மத்தை முறையாக கடைபிடிக்காமல் வாழ்தலோடு, ஆத்மா அறி(டை)ய வேண்டிய பரப்ரஹ்ம ஸ்வரூபத்தையும் அறி(டை)யாமலேயே இருக்கின்றான்.

"யதோ வாஇமாநி பூதாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தி யத்ப்ர யந்தி அபிஸம்விசந்தி தத்விஜிஜ்ஞாஸஸ்வதத ப்ரஹ்மேதி" எனும் உபநிடத வாக்யம் பரஹ்மம் எத்தகையது என்பதை விளக்குகின்றது. நம்மால் காணப்படும் நகரும் குழுவும் நகரா குழுவும் நிறைந்த இவ்வுலகம் எதனிடமிருந்து தோன்றியதோ, எதனால் நிலைபெற்று உயிருடன் வாழ்கின்றதோ, இறந்தபின் எதனிடம் ஒன்றுகிறதோ அதை பரஹ்மம் என அறி என்கின்றது. "ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்ரஹ்ம" என்று சுருதி வாக்யமும் விவரிக்கின்றது. இதனையே ஸத்யமாக இருப்பது ப்ரஹ்மம். ஞானமாக இருப்பது பரஹ்மம். அநந்தமாக இருப்பது ப்ரஹ்மம் என விசிஷ்டாத்துவைதம் விரிகின்றது. மேலும் அந்த ப்ரஹ்மம் வேறு எதுவுமில்லை. 'ஸ்ரீமந்நாராயணனே' என்றும் பறைசாற்றுகின்றது.

உலகம் உண்ட பெருவாயனான ஸர்வேச்வரன், அசித் எனும் ஜடப் பொருளான உலகத்தைப் படைத்து, அதன்மேல் சித் எனும் உயிருள்ளப் பொருளான ஜீவாத்மாக்களை உலவ விட்டுள்ளான். இவ்வாத்மாக்கள் தனக்குத் தேவையான ஆடையைப் போன்ற உடலை அணி(டை)ந்து அவற்றினுள் இருந்து அவை படும் பாட்டை எல்லாம் அனுபவித்துக்கொண்டு அங்கேயே கிடந்து, அவ்வுடல் அழிந்துபோன போது கிழிந்த ஆடையை கழற்றி எறிவது போல அவ்வுடலை விட்டு வேறு ஒரு உடலை தரிக்கின்றன. இதுகுறித்தே கீதையிலும் ஆத்மா அழிவதில்லை ஆத்மாவிற்கு உடல் ஆடையைப் போன்றது என்று கீதை நாயகன் கூறிப்போந்துள்ளான்.

மனித ஜீவாத்மாவானது இறுதியில் பரமாத்மாவிடம் சேர்வதே மனித குறிக்கோளாக இருக்க வேண்டும் என்பதே நம் இந்து சமயப் பெரியார்கள்

வழிவழியாக வாய்மொழியாக கூறியும், ஏட்டில் எழுதியும், நடைமுறைப்படுத்தியும் நமக்கு விட்டுச் சென்றுள்ள விலை மதிப்பிடமுடியாத சொத்தாகும்.

அற்ப, நிலையில்லாத, அழியும் சொத்தான இம்மைக்குரிய சொத்தை மட்டும் நம் பெரியோர்களிடம் சண்டையிட்டு அனுபவிக்கும் நாம் அவர்கள் நமக்கு மறுமைக்காக விட்டுச் சென்றுள்ள சொத்தை மட்டும் ஏன் முறைப்படி அனுபவிக்கக்கூடாது? அவர்கள் நமக்கு இலவசமாக அளிக்கும் சமயத்தத்துவப் பொருள்களை நாம் ஏன் ஏற்றுக்கொள்ளக்கூடாது? முதுமையில் இன்பமாக இருக்க இளமையில் உழைக்கும் நாம் மறுமையில் பேரின்பமாக இருக்க இம்மையிலே இறைவனுடைய திருநாமங்களை வாய்ப்படைத்த பயனுக்காக வாயாரச் சொல்லியும், மனம் படைத்த பயனுக்காக மனதாரச் சிந்தித்தும், திருலீலைகளைப் பற்றிய புராணச் செய்திகளை செவிப்படைத்த பயனுக்காக பிறர் சொல்ல நாம் கேட்டும், முன்னோர் எவ்வழிச் செல்லின் அவ்வழிச் செல்வது மரபு எனும் கூற்றிற்கிணங்க சமயச சான்றோர்களான சமய முன்னோடிகள் சென்று இறைவனடித் தொழுது அவனடிக்கீழ் புகுந்தவாறே நாமும் ஏன் புகுறக்கூடாது? சிறிதளவேனும் நாம் இதனைக் குறித்து சிந்திப்போமேயானால் நாமும் ஒரு சமயச் சிந்தனையாளனாகவும், சமயவாதியாகவும் உருவாவதில் வியப்பொன்றுமில்லை.

சமயத்தோடு நம்மை இணைத்துக் கொள்ளவேண்டுமெனில் சமயச் சிந்தனை ஒன்றுமட்டும் போதாது. ஒரு நல்ல குருவிடம் சென்று, குருகுல கல்வி கற்கவேண்டும். கற்றபடி நிற்க வேண்டும். நின்றபடி நடக்கவண்டும். அப்படி இருந்தாலன்றோ! வீடுபேறு அடைவது. எப்படி ஒருவன் தாய் என்பவள் இல்லாமல் இவ்வுலகிற்கு வர இயலாதோ அவ்வாறே அவ்வுலகிற்கு ஒரு குரு இல்லாமல் செல்ல இயலாது. எனவே குருபக்தி அவசியம். நமக்கு இன்று நாலாயிர திவ்யப் பிரபந்தம் எளிதாக ஏட்டிலே கிடைக்கிறதென்றால் அது யாருடைய குருபக்தி என நாம் அறியவேண்டும். வேதம் தமிழ் செய்த மாறன், சடகோபன் எனும் 'நம்மாழ்வாரை' குருவாக ஏற்றுக்கொண்டு அவரைப் பணிந்து அன்றோ 'ஸ்ரீமந்நாதமுனிகள்' எனும் வைணவ முதல் ஆசாரியர் (குரு) நாலாயிரத்தை தொகுத்தார். அம்மகானுடைய இன்னருளாலன்றோ பேதை பாமரனும் இன்று திவ்யப் பிரபந்தத்தை அறிந்துய்ய முடிகின்றது.

இப்படிப்பட்ட குருகுலத்தின் மேன்மையை அறிந்து, ஆழ்வார்களிலே பெரியாழ்வார் காட்டிய பகவத் பக்தியும், ஆழ்வார் திருமகளார் ஸ்ரீஆண்டாள் தன்னுடைய தகப்பனாரையே குருவாகக் கொண்டு யாவற்றையும் கற்றுத்தேர்ந்து, ஆழ்ந்து, அனுபவித்து உலகிற்கு காட்டிய பாகவத பக்தியும் தன்னுடைய உணர்வின் உணர்வாக கலக்க ஒவ்வொரு மானிடரும் அருள்பெற்ற நாதமுனி முதலான ஆசாரியர்களை கதியாகக் கொண்டு உய்வு பெறுவார்களாகுக.





# திருமலை திருப்பதி தேவஸ்தானம்
## நூல் வெளியீட்டுத்துறை

### தமிழ் மொழியில் வெளிவந்துள்ளவை

| வரிசை எண். | நூலின் பெயர் | விலை ரூ. |
|---|---|---|
| 1. | ஸர்வதேவதா பூஜாவிதானம் | 5-00 |
| 2. | ஆத்ம போதம் | 29-00 |
| 3. | மஹாபாரதக் கதைகள் | 7-00 |
| 4. | முக்கவிகண்ட காவியம் பகுதி-II | 20-00 |
| 5. | சித்திரத் திருப்பாவை | 15-00 |
| 6. | பகவத் ஸந்தேஷம் | 0-50 |
| 7. | திருவேங்கட ஸ்தல புராணம் | 13-00 |
| 8. | நியாய ஸித்தாஞ்சனம் | 9-00 |
| 9. | அன்னமய்யா சங்கீர்த்தன மஞ்சரி | 10-00 |
| 10. | நித்யா நுஸந்தானம் (வடகலை) | 8-00 |
| 11. | நித்யா நுஸந்தானம் (தென்கலை) | 10-00 |
| 12. | திருவேங்கடமலை வரலாற்றுமாலை | 30-00 |

### ஆங்கில மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | அட்மினிஸ்ட்ரேஷன் ஆப் டெம்பிள்ஸ் | 25-00 |
| 2. | எ சினாப்ஸிஸ் ஆப் ஸ்ரீமத் பாகவதம் | 7-00 |
| 3. | பக்த புரந்தரதாஸா | 1-25 |
| 4. | ஹோலி ட்ரினிடி | 1-00 |
| 5. | பிரஸன்ன வெங்கடதாஸா | 1-50 |
| 6.** | சத்குரு தியாக பிரஹ்ம புஷ்பாஞ்சலி | 250-00 |
| 7.** | 108 வைஷ்ணவேட் திவ்ய தேஸம்ஸ் தொகுதி-III | 60-00 |
| 8.** | 108 வைஷ்ணவேட் திவ்ய தேஸம்ஸ் தொகுதி-IV | 60-00 |
| 9. | ஊர்தவமூலா | 12-00 |
| 10. | வ்யாஸராயலு | 0-75 |
| 11. | விசிஷ்டாத்துவைதா | 10-25 |
| 12. | விஷன் ஆப் ஆரியன் குலோரி | 1-50 |
| 13. | நம்மாழ்வார் | 3-00 |
| 14. | திருமழிசையாழ்வார் | 5-00 |
| 15. | பத்மாவதி அம்மவாரி டெம்பிள் | 2-00 |
| 16. | வைஷ்ணவ ஸம்ப்ரதாயம் இன் திருமலா | 1-25 |
| 17. | ஸ்ரீமத் பகவத் கீதா | 20-00 |
| 18. | க்ருஹ வைத்தியம் | 6-00 |
| 19. | ஹிஸ்டரி ஆப் திருப்பதி தொகுதி-I | 37-00 |
| 20. | ஹிஸ்டரி ஆப் திருப்பதி தொகுதி-II | 30-00 |
| 21. | ஹிஸ்டரி ஆப் திருப்பதி தொகுதி-III | 10-00 |
| 22. | திருமலை-திருப்பதி-திருச்சானூர் | 8-00 |

### வட மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | அலங்கார சங்க்ரஹா | 16-00 |
| 2. | ப்ரஹ்ம்ம சூத்ர பாஷ்யம் | 30-00 |
| 3. | பாகவத மஹா புராணம் தொகுதி-I | 75-00 |
| 4. | கீதிகா நக்ஷத்ர மாலிகா | 2-50 |
| 5. | கோபால ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 5-00 |
| 6. | கடோபநிஷத் | 15-00 |
| 7. | கபிலேஸ்வரசுவாமி சுப்ரபாதம் | 0-10 |
| 8. | லலிதா ஸஹஸ்ரநாமம் | 28-00 |
| 9. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18-00 |
| 10. | சீதாராமஞ்சநேயம் | 50-00 |
| 11. | தத்வ ஸங்க்யானம் | 2-00 |
| 12. | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-I | 49-00 |
| 13.* | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-II (இரண்டு தொகுதியும் சேர்ந்து) | 45-00 |

குறிப்பு : தி.தி. தேவஸ்தானப் பதிப்பகத்தில் வெளிவந்துள்ள நூல்களை மொத்தமாகக் கொள்முதல் செய்பவர்களுக்கு கீழ்க்கண்டவாறு வாணிபக் கழிவு அளிக்கப்படும்.

1. ரூ. 100லிருந்து 500 வரை வாங்குவோருக்கு 15%
2. ரூ. 501லிருந்து 999 வரை வாங்குவோருக்கு 25%
3. ரூ. 1000லிருந்து அதற்குமேல் வாங்குவோருக்கு 30%

தயவு செய்து நீங்கள் விரும்பும் நூலின் விலை மற்றும் தபால் செலவோடு கேட்பு காசோலையாக "The P.R.O., Sales Wing of Publications, T.T. Devasthanams, Tirupati" எனும் பெயருக்கு எடுத்து இம்முகவரிக்கு அனுப்பவும்.

* அச்சில் ** கழிவு இல்லை.



# செய்திச் சுருக்கம்



## திருமலையில் பரிணயோத்ஸவம் (கல்யாணோத்ஸவம்)

திருமலையில் 4-5-98 முதல் 6-5-98 வரை மூன்று நாட்கள் பத்மாவதி பரிணயோத்ஸவம் மிக சிறப்பாக நடந்தது. இம் மூன்று நாளும் திருமலையப்ப சுவாமி ஸ்ரீதேவி, பூதேவி சமேதமாக நாராயணகிரி தோட்டத்திற்கு எழுந்தருள சம்ப்ரதாய முறைப்படி பத்மாவதி பரிணயோத்ஸவம் வைபவமாக நடைபெற்றது. மூன்றும் நாளான 6-5-98 திருமலையப்பசுவாமியை மாலை சுமார் 3-30 மணியளவில் கருடவாகனத்தில் எழுந்தருளப்பண்ணி திருவீதிவலமாக் கொண்டுவரப்பட்டனர். அவருடன் உபய நாச்சியார்களும் எழுந்தருளினர். இதுபோது ஹரிகதைகளும், காலக்ஷேபங்களும் பக்தர்களை ஆனந்த வெள்ளத்தில் மிதக்க வைத்தன. இந் நிகழ்ச்சியில் தி.தி. தேவஸ்தானப் பொறுப்பாண்மைக்குழுத்தலைவர் திரு. கலிதிண்டி ராமச்சந்திர ராஜு அவர்கள், இணைச் செயலாட்சித்தலைவர் (திருமலை) திரு. பாலசுப்ரமண்யம், பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. மஹாதேவநாயுடு, கோயில் துணைச் செயலாட்சித்தலைவர் திரு. ஸ்ரீனிவாசுலு, பேஸ்கார் திரு. ரங்கநாதாச்சாரி போட்டு பேஸ்கார் திரு. சத்யநாராயண மற்றும் பல உயர் அலுவலர்களும் கலந்து கொண்டனர்.



## விருது

தி.தி. தேவஸ்தான ஊழியரும் ஊழியர் சங்க அமைபபின் தலைவருமான திரு. சின்னங்காரி ரமணவுக்கு அண்மையில் ஆந்திரமாநில அரசு "ச்ரம சக்தி" விருதினை அளித்து கௌரவித்துள்ளது. மே தினத்தை முன்னிட்டு ஏலூரில் நடந்த ஓர் நிகழ்ச்சியில் ஊழியர்கள் நல அமைச்சர் திரு. ஸ்ரீனிவாச யாதவ் அவர்கள் இவ்விருதினை அவருக்கு வழங்கினார்.



## பொறுப்பாண்மைக் குழுவின் முடிவுகள்

தி.தி. தேவஸ்தானப் பொறுப்பாண்மைக்குழுக்கூட்டம் 30-4-98 மற்றும் 1-5-98 அன்று கூடியது. குழுக்கூட்ட இறுதியில் குழுக்கூட்டத்தலைவர் திரு. கலிதிண்டி ராமச்சந்திரராஜு அவர்கள் பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் குழுவின் முடிவுகளை கீழ்க்கண்டவாறு அறிவித்தார்.

* கன்வேயர் பெல்ட் முறையில் பக்தர்கள் அனைவரும் அமைதியாக திருமலையானை தரிசிப்பதற்கு வழிவகுக்கப்பட்டுள்ளது.
* பத்மாவதி தாயாருக்கு கிரீடம் செய்வது குறித்து முன்பு முடிவு எடுக்கப்பட்டதை மேலும் பரிசீலனை செய்யப்பட்டது.
* திருப்பதியில் உள்ள தியாகராஜர் இசை சம்மேளனத்திற்கு ரூ. 3 இலட்சம் ஒதுக்கப்பட்டது.
* திருப்பதி ருயா அரசு மருத்துவமனையில் புற்றுநோய் பிரிவு வளர்ச்சிக்கு ரூ. 30 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.
* தமிழ்நாட்டில் உள்ள அரியக்குடி கிராமத்தில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடமுடையான் திருக்கோயில் மகா கும்பாபிஷேகத்திற்கு பெருமாள் கோயில் அறக்கட்டளைக குழு ரூ. ஒரு கோடி செலவு செய்ய திட்டமிட்டுள்ளது. அவற்றில் தி.தி. தேவஸ்தானத்தின் சார்பாக ரூ. 25 இலட்சம் அளிக்க திட்டமிடப்பட்டுள்ளது.
* ஒவ்வொரு நாளும் மாலையில் அனுமதிக்கப்படும் அதிமுக்யமானவர்கள் தரிசன கட்டணச் சீட்டு ரூ. 50லிருந்து ரூ. 100க்கு அதிகப்படுத்த முடிவு எடுக்கப்பட்டது.
* திருப்பதியில் உள்ள கோவிந்தராஜ சுவாமி பள்ளிக்கு ரூ. 40 இலட்சம் செலவில் இரண்டாவது தளம் கட்டிட திட்டமிடப்பட்டுள்ளது.
* 12 மணி நேரத்திற்குள் 24 ஆயிரம் இலட்டுகளை தயார் செய்து பாலதின் உறையில் வைத்து மூடும்படியான இயந்திரத்தை பெங்களூரிலுள்ள "மைகோ பாஸ்ட்" நிறுவனத்திடமிருந்து கொண்டுவரப்பட்டு இலட்டு தயார் செய்து 'காட்டப்பட்டது'. இதனைப் பொறுப்பாண்மைக்குழு பரிசீலித்துள்ளது.

## பாராட்டுவிழா

திருமலை-திருப்பதி தேவஸ்தான தர்மபிரசார பரிஷத்தின் முதன்முதலாக மாவட்ட அமைப்பாளராகவும், பிறகு மாநில அமைப்பாளராகவும், அதன்பிறகு தமிழகம் - புதுவை இருமாநிலங்களுக்கும் முறையே அமைப்பாளராகவும் அதனபிறகு ஒத்திசைவாளராகவும் பணிபுரிந்த ஆற்காடு ஆ.செ. நரசிம்மன் அவர்கள் 12-5-98 அன்று பதவியிலிருந்து ஓய்வு பெற்றார்.

அவரது சேவையை பாராட்டி தி.தி. தேவஸ்தான சென்னை கிளையின் சார்பில் தி.நகர் தேவஸ்தான தகவல் மைய பிரார்த்தனை மண்டபத்தில் ஓம் முருகாஸ்ரம சங்கரானந்த சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. விழாவில் தி.தி. தேவஸ்தான துணைச் செயலாட்சித் தலைவர் சூரிய நாராயணமூர்த்தி அன்னமாச்சார்யா, ஆழ்வார் திவ்ய பிரபந்தம் தாஸர் திட்டத்துறையின் இயக்குனர் திரு. மேடசானி மோகன், ஒலி, ஒளிப்பதிவுத் துறை இயக்குநர் திரு. காமிசெட்டி சீனிவாசலு செட்டி மற்றும், திரு. பித்துக்குளி முருகதாஸ் சுவாமி, திரு. கண்ணன் சுவாமி, நாவல்பாக்கம் திரு. வரதாச்சாரியார், கலைமாமணி கவிஞர் திரு. சுப்புஆறுமுகம், 'ராஜயோகம்' ஆசிரியர் திரு. பாண்டுரங்கன், மாயூரம் தண்டபாணி, தமிழ்நாடு பூசாரிகள் சங்க பேரவை செயலாளர் திரு. டி.எஸ். கோதண்டராமன், திரு. கிடாம்பி நாராயணன் ராஜாமணி, டாக்டர் ராஜலட்சுமி வெங்கடரமணி மற்றும் பல பிரமுகர்கள் கதராடை, பொன்னாடை மாலைகளை திரு. ஆ.செ. நரசிம்மனுக்கு அணிவித்து அவரது அயராத சமயப் பணிகளைப் பற்றி பாராட்டி பேசினார்கள்.

திரு. சிருங்கேரி சங்கராச்சார்ய ஸ்வாமிகள் அளித்த பொன்னாடையை திரு. எஸ். ஆர். ரகோத்தமாச்சார் திரு. ஆ.செ. நரசிம்மன் அவர்களுக்கு அணிவித்து பேசினார். தி.தி. தேவஸ்தான உள்ளூர் ஆலோசனைக்குழுவின் சார்பாக அதன் உறுப்பினர் திரு. ஆர். சீனிவாசன் (இந்தியன் எக்ஸ்பிரஸ்) ஆ.செ. நரசிம்மனை பாராட்டிப் பேசினார்.

தி.தி. தேவஸ்தான மேலாளர் திரு. மாதவராவ் அனைவரையும் வரவேற்று பேசினார். விழாவையொட்டி செல்வி காயத்ரியின் வீணை நிகழ்ச்சியும் பிரதீபாவின் இசை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

## 29ம் ஆண்டு படிவிழா

திருமலை-திருப்பதி 29ம் ஆண்டு படிவிழா 175 பஜனைக் குழுவினருடன் அண்மையில் நடந்தது. ஏறத்தாழ 5 ஆயிரம் பக்தர்கள் திருப்பதியில் இருந்து மலைக்கு நடந்தே சென்றனர்.

முதல்நாள் பஜனைக்குழுவினர்கள் தங்கள் நிகழ்ச்சிகளை திருச்சானூர் பத்மாவதி தாயார் சன்னிதியில் தொடங்கினார்கள். பின்னர் அன்று மாலை 5 மணிக்கு திருப்பதி இரண்டாவது சத்திரம் கோவிந்தராஜர் கல்யாண மண்டபத்திலிருந்து நகர்வலமாக சென்று அன்னமாச்சார்யா கலாமண்டபத்தை அடைந்தனர். அங்கு பல்வேறு பக்தி நிகழ்ச்சிகளும் பஜனைகளும் நடைபெற்றன. இவ்விழாவில் தேவஸ்தான இணைச் செயலாட்சித் தலைவர் திரு. டி. ராமகிருஷ்ண மற்றும் பல பிரமுகர்கள் உரையாற்றினர். அன்று மூன்று வேளையும் பக்தர்களுக்கு சென்னை ஓம் முருகாஸ்ரமம் அன்பர்களால் அன்னதானம் செய்யப்பட்டது.

மறுநாள் 14ம் தேதி செவ்வாய் அன்று திருப்பதி மலையடியோரம் அலிபிரியில் விளாப்பாகம் சம்பத் குழுவினரின் நாதஸ்வரத்துடன் படிவிழா நிகழ்ச்சிகள் துவங்கின. திருப்பதி தேவஸ்தானம் தர்ம பிரசார பரிஷத் தமிழக புதுவை ஒருங்கிணைப்பாளர் ஆற்காடு ஆ.செ. நரசிம்மன் அனைவரையும் வரவேற்க, திருமலை டி.எஸ். அனந்தநாராயண அடிகளார், கரந்தை தாமோதரன் ஆகியோர் பிரார்த்தனை பாடல்கள் பாட, தேவஸ்தான துணைச் செயலாட்சித் தலைவர் திரு. வெங்கட் ரெட்டி, பீமாஸ் ஹோட்டல் அதிபர் திரு. ரகு மற்றும் பல முக்கிய பிரமுகர்கள் பங்கேற்க "வேங்கட ஜோதி" ஏற்றப்பட்டு பெண்கள் ஒவ்வொரு படிக்கும் மஞ்சள் குங்குமம் வைக்க தேங்காய் உடைத்து கற்பூரம் ஏற்றி படிவிழா துவக்கப்பட்டது. இதில் 175 பஜனைக் குழுவினர்களும், 5000 பக்தர்களும் பஜனைப் பாடல்களை பாடிக்கொண்டே படியேறிச் சென்று திருமலையின் நான்கு மாட வீதிகளில் வலம் வநது புதிய சதஸ் மண்டபத்தில் ஆன்மீக நிகழ்ச்சிகளை நடத்தினார்கள். அன்று மாலை படிவிழா பக்தர்களுக்கு சிறப்பு தரிசனமும், ஆகார, இட வசதிகளும் தேவஸ்தானத்தினரால் செய்யப்பட்டது.

மறுநாள் புதன்கிழமை புதிய மண்டபத்தில் வேலூர் கிருஷ்ண கலாமந்திர் நடன பள்ளி மாணவிகளின் நடனமும், பெங்களூர் சுவாதி கலாசாலை குழுவினர், பெங்களூர் விநாயகா பஜனை குழுவினர்களால் இசை நிகழ்ச்சிகள், பஜனைகள், நடனம் நடைபெற்றன. குலுக்கல் முறையில் 10 பஜனைகளுக்கு ஆர்மோனிய பெட்டிகள் பரிசளிக்கப்பட்டது. படிவிழா நிகழ்ச்சிகளில் ஏராளமான பத்திரிகையாளர்கள் பங்கேற்றனர். சென்னை, ஆந்திரா தொலைகாட்சியினரும் சென்னை எல். ஆர். சுவாமி வீடியோ நிறுவனத்தினரும் படிவிழா நிகழ்ச்சிகளை படமெடுத்தனர்.

மலையேறும் போது காஞ்சிபுரம் திருமலை திருவேங்கடமுடையான் டிரஸ்டியினர், திருமலை ருக்மணி கண்ணன் குழுவினர், சுங்குவார் சத்திரம் பூங்காவன முதலியார், குண்ணம் எதிராஜபிள்ளை ஆகியோர்களால் வெவ்வேறு இடங்களில் பிரசாதம் அளிக்கப்பட்டது.

விழா நிகழ்ச்சிகளை படிவிழா சங்க பொதுச் செயலாளர் ஆற்காடு ஆ.செ. நரசிம்மன், பொருளாளர் வேலூர் வி.ஏ. புண்ணியகோட்டி மற்றும் வேலூர் எஸ்.கே. நாகையா, ஆற்காடு எ.எம். தேவகுமார் ஆகியோர்களால் வெகு சிறப்பாக செய்யப்பட்டிருந்தது.

## குத்துவிளக்கு பூஜை

திருமலை-திருப்பதி தேவஸ்தானம் தர்மபிரசார பரிஷத்தின் சார்பில் அண்மையில் இராணிப்பேட்டை வாழக்கரை அம்மன் ஆலயத்தில் குத்துவிளக்கு பூஜை நடைபெற்றது. இதனை தமிழக - புதுவை மாநிலங்களின் தர்ம பிரசார பரிஷத் ஒத்திசைவாளர் ஆற்காடு ஆ.செ. நரசிம்மன் லக்ஷ்மி சஹஸ்ரநாமம் சொல்லி நடத்திவைத்தார். ஆலய நிர்வாகி சாம்ராஜ்ய லக்ஷ்மி குடும்பராவ் இதற்கான ஏற்பாடுகளை செய்திருந்தனர்.





# NAVAJEEVAN BLIND RELIEF CENTER (REGD.)

**(FREE H OME FOR THE BLIND AND AGED)**

2-21-A, SAPTHAGIRI ASHRAM, TIRUCHANOOR, TIRUPATI-517 503.

*"எந்தரோ மஹானுபாவுலு - அந்தரிகி வந்தனமுலு"*

**வணக்கம்.**

"எந்தரோ மஹானு பாவுலு" என்று பெரியோர்கள் கூறியபடி எத்தனையோ ஊர்-பெயர்-முகம் தெரியாத கருணை உள்ளம் கொண்ட ஆஸ்தீக அன்பர்கள், கடந்த 19 வருடங்களாக அளித்துவரும் ஆதரவின் காரணமாக திருப்பதி நவஜீவன் ஆச்ரமத்தில் சுமார் 95 பார்வையற்ற குழந்தைகளும் ஆதரவற்ற முதியோர்களும் இலவசமாக உணவு, உடை, இருப்பிடம் மற்றும் கல்வி அறிவு பெற்று பயன் அடைந்து வருகிறார்கள்.

மேலும் விரைவில் 50 படுக்கைகள் கொண்ட ஒரு இலவச கண் மருத்துவமனையும் ஆஸ்தீக அன்பர்களின் உதவியுடன் நிர்மாணித்துள்ளோம்.

## வேண்டுகிறோம் அன்பர்களின் உதவியை

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் வசித்துவரும் ஆதரவற்ற முதியோர்கள் மற்றும் பார்வை யற்ற குழந்தைகளுக்கு தினந்தோறும் மூன்றுவேளையும் தொடர்ந்து அன்னதானம் நடைபெறுகிறது. திருபபதி புண்யஸ்தலத்தின் நவஜீவன் ஆச்ரமத்தில் அனனதானம் வழங்க நாள் ஒன்றுக்கு சுமார் ரூ. 500/- செலவாகிறது.

ஆஸ்தீக அன்பர்கள் வருடத்தில் ஏதேனும் ஒருநாளில் (உங்களுடைய பிறந்தநாள், திருமண நாள் குழந்தைகளின் பிறந்தநாள், அல்லது முன்னோர்களின் திதிநாளில்) நவஜீவன் ஆச்ரமத்தின் பார்வையற்ற குழந்தைகளுக்கும், திக்கற்ற முதியோர்களுககும ரூ. 500/- காணிக்கையாக அனுப்பி ஒருநாள் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்து ஸ்ரீவேங்கடேச பெருமாளின் அருளைப்பெற வேண்டுகிறோம்.

அனனதானம் வழங்கும் அன்பர்களின் சார்பாக குறிப்பிட்ட நாளில் எங்கள் ஆச்ரம வளா கத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீஏழுமலையான் மற்றும் ஸ்ரீபத்மாவதி தாயாருக்கு கூட்டுப் பிரார்த்தனை செய்வித்து பிரசாதத்துடன் விபரம் அனுப்பிவைக்கப்படும்.

நவஜீவனுக்கு அனுப்பி வைக்கப்படும் டொனேஷனுக்கு வருமான வரிச்சலுகை உண்டு. Contributions to Navajeevan Blind Relief Centre, Tirupati are exempted from Income Tax U/S 80 (G)

ஆஸ்தீக அன்பர்கள் தங்களது டொனேஷனை by Ch/DD/MO வாயிலாக NAVAJEEVAN BLIND RELIEF CENTRE என்கிற பெயரில் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

"ஆதரவற்றவர்களுக்கு அளிக்கும் உதவிகளும் ஆண்டவனுக்கு செய்யும் தொண்டாகும்" ஸ்வாமி விவேகானந்தா.

தலைமை அலுவலகம் :
நவஜீவன் ஆச்ரமம்,
திருச்சானூர், திருப்பதி-517503.

நாராயண ஸேவையில்
K.S. ஆசார்யா
Founder / President

கிளைகள் : பத்ராசலம் (ஆ.பி.) வாரணஸி (உ.பி.)

# அருளால் எவையும பார் என்றான்

'கண்ணபுரத்தான்'

"அம்மா! இதோ பார்! உனக்கு என்ன வாங்கிக் கொண்டு வந்திருக்கேன்" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். பாண்டிச்சேரிக்குத் தன் பள்ளித் தோழிகளுடன் கல்விப் பயணம் சென்றிருந்த என் கடைசி மகள் மங்கை வந்திருந்தாள். வந்ததும் வராததுமாகத் தன் தோள் பையைத் திறந்து தன் அம்மாவிடம் ஒரு படத்தை எடுத்துக்கொடுத்தாள். 'என்ன படம்?' என்ற ஆர்வத்தில் அருகில் சென்று பார்த்தேன்.

வெண்மையான பிளாஸ்டிக் அட்டையில் 'அரவிந்தர் அன்னை' இருவரும் அந்தப் படத்தில் தியான வடிவில் இருந்தனர். அரவிந்தர் முகம் சற்று நிமிர்ந்து நேருக்கு நேர் பார்ப்பது போல் அமைந்திருந்தது. அவர் விழிகள் மலர்ந்தும் மலராமலும் கிண்கிணி வாய்ப்பெய்த மணிகள் போல் இமை மெல்லத் திறந்து ஒளிர்ந்தன. உற்றுப் பார்ப்பவருக்கு ஏதோ மௌன உபதேசம் செய்வன போல் அவை தோன்றின. பார்த்துக்கொண்டே இருக்கும் போது மனதில் ஓர அமைதி நிலவுமாறு அவை நிகழ்ந்தன.

பக்கத்தில் அன்னையின் வடிவம். ஓரளவு குனிந்த தலை. கூரிய, ஆனால் கனிந்த பார்வை. பார்ப்பவரை அன்போடு தன்பால் அழைப்பான போல் அவை தோன்றின. அரவிந்தர் முகத்திலும் ஒரு மெல்லிய புன்னகைப் பொலிவு. அன்னை முகத்திலும் ஒரு அமைதியான புன்னகைக் கனிவு. அங்கே ஞானம் பொலிந்தது. இங்கே அன்பு கனிந்தது.

"அம்மா! இவர்களுக்கு அன்றூடம் மலர் வழிபாடு செய்ய வேண்டுமாம்"... என்ற என் மகள் குரல் கேட்டு அவளைத் தலைநிமிர்ந்து பார்த்தேன். அவள் தொடர்ந்து தன் தாயிடம் பேசிக்கொண்டிருந்தாள.

"பாண்டிச்சேரிக்குச் சென்றிருந்தோம் அல்லவா. அங்கு அரவிந்தர் ஆசிரமும் சென்றோம். எல்லோரும் அங்கே மலரிட்டு வணங்கினர். தேங்காய், பழம் ஒனறும் இல்லை. பலப் பல மலர்களை வைத்து வந்தவர்கள் எல்லாம் வழிபட்டனர். தாமரை மலர், அல்லி மலர்; மரமல்லி மலர், முல்லை மலர் இப்படிப் பல மலரிட்டு வழிபட்டனர். பின் அமைதியாக கொஞ்ச நேரம் அமர்ந்து தியானம் செய்துவிட்டுச் சென்றனர். பேச்சு இல்லை. எந்த ஆடம்பர படாடோப நிகழ்ச்சிகளும் இல்லை. மலர் ஒன்றுதான் அங்கே எங்கும் காணப்படுகிறது. பயணம் சென்ற நாங்கள் எல்லாம் மலர் வைத்து வழிபட்டோம். நான் மூன்று செந்தாமரை மலர்கள் வைத்து வழிபட்டேன். இங்கு நாமும் அன்றூடம் மலர் வைத்து வழிபட வேண்டும் அம்மா. எந்த மலராய் இருந்தாலும் வைத்து வழிபடலாம். ஒவ்வொரு மலரால் ஒவ்வொரு நன்மை உண்டாகுமாம். ஒருவகை மலர் வழிபாட்டில் அன்பு பெருகுமாம். இன்னொரு வகை மலர் வழிபாட்டில் பகை நீங்குமாம். பிறிதொரு வகை மலர் வழிபாட்டில் நட்பு, உறவு வளருமாம். இப்படி அறிவுக்கு, அழகுக்கு, பொறுமைக்கு, அமைதிக்கு ஒற்றுமைக்கு என்று ஒவ்வொரு வகை மலர் வழிபாடு உள்ளதாம். என்று நீண்ட சொற்பொழிவு ஒன்று செய்து அந்தப் படத்தைத் தன் அம்மா கையில் கொடுத்தாள்.

நான் அலுவலகம் சென்று மாலையில் சற்று நேரம் கழித்து மீண்டேன். 'மேசையில் சிறறுண்டி உள்ளது சாப்பிடுங்கள்' என்று சொல்லியபடியே அம்மாவும் பொண்ணும் பக்கத்தில் இருந்த மகளிர் பல்கலைக்கழக வளாகத்திலிருந்து மாலை நடைப்பயிற்சிக்காகச் செல்லத் தொடங்கினர். அவர்கள் கையில் ஒரு சின்ன பிரம் புக்கூடை இருந்தது. பிரம் புக்கூடை எதற்கு அம்மா? என்றேன். அன்றூடம் 'அரவிந்தர், அன்னை' இருவருக்கும் மலர் வழிபாடு செய்ய வேண்டும் அப்பா. அங்கு பல்கலைக்கழக வளாகச் சாலையின் இருமருங்கும் பல மலர்கள் பூத்திருக்கும். பறித்துக் கொண்டுவரப் போகிறோம் என்று என் மனைவி மீண்டும் நினைவுறுத்துவிட்டு அம்மாவும் பொண்ணும் நடைப் பயிற்சிக்குப் போய்விட்டனர்.

கைகால் முகம் கழுவிக் கொண்டு, வீட்டு நடையில், சாய்வு நாற்காலியில் படுத்த

படியே அருகில இருநத ஆழ் வார பாசுரங்களை எடுததுப் புரட்டி ஆண்டாள் திருப் பாவையைப் பாடிப் படிக்கலா னேன. 'மார்கழித் திஙகள மதிநிறைந்த நனனாளால்...' என்று தொடங்கி பாட்டையும் அதறகு பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் உரையை யும் படித்துக் கொண்டிருந் தேன்" இற்றைப் பறை கொள் வான் அன்றுகாண் கோவிந்தா! எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன் தன்னோடு உற்றோமே ஆவோம்; உனக்கே நாம் ஆட் செய்வோம்; மற்றை நம் காமங் கள் மாற்று...' என்னும் பாசுரம் படித்துக் கொணடிருந்தபோது கதவு தட்டும் ஒலி கேட்டது. எழுந்து சென்று கதவைத திறந் தேன. என் மகளும் மனைவியும் நினறுகொண்டிருந்தனர். என் மகள் கையில் இருந்த பிரம் புப் பூக்கூடை நிறைய மலர் கள் இருந்தன. உள்ளே வந்து அவற்றை ஒரு தாம்பாளத்தில் மெல்லக் கொட்டினாள். அம் மாவும் பெண்ணும் அவறறை வகை வகையாய்ப் பிரித்தனர்.

மிளகு அளவே உள்ள சின்ன சின்ன மலர்கள் ஒரு வகை.

"அப்பா, இந்த மலர்களைப் பார்த்தீர்களா மிக மிகச் சினன வையாக இருக்கின்றன அல் லவா. இவை காலில் மிதிபடும் புலலில் பூத்திருந்தன என்றாள்."

அந்தச் சின்ன மலர்கள் பல நிறம். சில வெள்ளையாகத் தும்பைப் பூப்போல் இருந்தன. சில ஊதா நிறம். நீல வானத் தின் நிறம். சில செஞ்சிவப்பு. மாலையில் மறையும் கதிர வன் போனற நிறம். இப்படி மூனறு நான்கு வண்ணங்களில் அவை இருந்தன. இப்படியே மஞ்சள் வெள்ளை நிறத்தில் சில சங்கு மலரகள் சிவப்பு வெட்சி, செம்பரத்தம மலரகள், கள்ளி மலர காட்டாமணக்கு மலர் களை கூட இருந்தன. இப்படி அங்குக் கிடைத்த மலர்களை எல்லாம் வகை வகையாய்ப் பிரித்து 'அரவிந்தர் அன்னை' படத்தின் முன் ஒரு தாம்பாளத் தில் வைத்து தாயும் மகளும் சிறிது நேரம் தியானம் செய் தனர்.

அன்று இரவு சாப்பிட்டு விட் டுப் படுக்கப்போனேன்.

'அப்பா' என்று கூப்பிட்டுக் கொண்டே என் மகள் படுக் கையில் வந்து அமர்ந்தாள். 'அப்பா! எல்லாக் கோயில் களிலும் தாமரை, மல்லிகை, முல்லை, ரோஜா, செவ்வந்தி, நந்தியாவட்டம் என்ற இந்த மலர்களை மட்டும் தானே வைத்து இறைவழிபாடு செய் கின்றனர். இங்கே 'அரவிந்தர் அன்னை' வழிபாட்டில் புல்லில் பூத்த மலர், புதரில் பூத்தமலர் - இப்படி எல்லா மலர்களையும் வைத்து வழிபடுகிறீர்களே அப் படி வழிபடலாம் என்கிறீர்களே - ஏன் அப்பா அப்படி? என்று கேட்டுச சிறிது நேரம் உட்காரந் திருந்தாள். எனக்குப் பதில் ஒன் றும் உடனே சொல்லத் தோன் றவில்லை. கொட்டாவி கொட் டாவியாய் வந்தன. பார்த்து விட்டு என்மகள் எழுந்து தூங் கப்போய் விட்டாள்.

காலையில் நான்கு மணிக்கு விழிப்பு வந்துவிட்டது. ஏன் அப்பா, இப்படி எல்லா மலர்க ளையும் வழிபாட்டுக்குப் பயன் படுத்துகிறீர்கள் என்ற என் மக ளின் கேள்வி மனதில் எழுந் தது.

சினன மலர்களில் பெரிய மலர்கள். ஓரிதழ் மலர்கள். பல இதழ் மலரகள். வெள்ளை மலர்; சிவப்பு மலர்; ஊதா மலர்; மஞ் சள் மலர். தரையில் மலரும் மலர்; நீரில் மலரும் மலர்; குன் றில் மலரும் மலர், செடி மலர்; கொடி மலர்; மர மலர். குத்தும் முள்ளுக்கிடையில் மலரும் மலர்; இடிக்கும் கல்லுக்கிடையில் மல ரும் மலர்; அற்பப் புல்லுக்கி டையே மலரும் மலர் வீட்டு மலர்கள்; காட்டு மலர்கள். காலை மலர்கள்; மாலை மலர் கள். இப்படி வடிகால் வண் ணத்தால், காலத்தால், இடத் தால் வேறுபட்ட பற்பல மலர் கள். ஆனால் எல்லாம் மலர்கள் எல்லாம் மென்மையா னவை; அழகானவை; அமை தியானவை. கொடு முள் ளுக்கு இடையிலும் மென் மையானவை; கருங்கல்லுக்கு இடையிலும் மென்மையா னவை. நாறுஞ் சேற்றுக்கு அரு கிலும் அழகானவை; ஓடும் ஆற் றுக்கு அருகிலும் அழகா னவை. ஊர்திகள் செல்லும் சாலை ஓரத்திலும் அமைதி யானவை. மக்கள் கூடித் கூக் குரலிடும் சோலைகளி லும் அமைதியானவை. அவை தோன்றிய இடங்களோ மண் தரை, சேற்றுக் குழி, கல் பாறை, மண்சாலை, மலை முகடு தோன்றிய செடிகொடி களோ அற்பமானவை புல்பூண் டுகளில்கூட தோன்றியவை. சுற் றிலும் முள்ளுக்கு இடை யில் தொட்டால் பால் சொட் டிப் புண்ணுக்கும் செடிகளி லும் மலர்ந்தன. ஆனால் எல்லா மலர்களும் தூய்மையா னவை; மென்மையானவை; அழ கானவை - அமைதியானவை.

இப்படித்தான் உலகில் பல் வேறு மக்கள உள்ளனர். குழந் தைகள், சிறுவர்கள், இளைஞர் கள், முதியோர்கள், கற்ப்பர்;

சிவப்பர்; வெளுப்பர். கற்றவர்; கல்லாதவர்; தாழ்ந்த தொண்டு செய்வோர். உயர் அலுவலர். அம்மா, அப்பா, அண்ணன், அக்கா, தம்பி தங்கை; நண்பர்; பகைவர்; உற்றார் உறவினர் இப்படிப் பல்வேறுபட்ட மக்கள் பலதரத்தினர்; பல நிலையினர்; பல இயல்பினர்; பல இடத்தினர்; நம்மைச்சுற்றி உள்ளனர். எப்படிப் பல்வேறு வகையான செடி கொடி மரங்களில் தூய்மையான, மென்மையான, அழகான அமைதியான மலர்களைக் காண்கின்றோமோ அப்படியே தம்மைச் சுற்றி உள்ள ஒவ்வொரு மனிதரிடத்திலும் ஒரு தூய்மையான இயல்பிருக்கும். மென்மையான குணமிருக்கும்; அழகான பண்பிருக்கும்; அமைதியான செயலிருக்கும். அவை ஆழ்ந்த நீரில் உள்ள மலர்போல் நெருங்கி அறிவதற்கு அரியதாக இருக்கும். மலையில் உள்ள மலர்போல் எட்டுதற்கு முடியாதவாறு முள்ளுக்கிடையேயான மலர்போல் இருக்கும். எப்படி இருந்தாலும் எங்கிருந்தாலும் அந்தத தூய்மையான, மென்மையான, அழகான, அமைதியான மலர் போன்ற ஒரு நல்ல தன்மை ஒவ்வொரு மனிதரிடமும், ஒவ்வொரு உயிரிடமும் இருக்கும். அதைத் தேடிக் கண்டு கொண்டு போற்றி வாழவேண்டும். அப்படி வாழ்ந்தால் நம்மிடமும் அந்தத் தூய்மை, மென்மை, அழகு, அமைதி அமைந்துவிடும். இதைத்தான் இந்த மலர் வழிபாடு உணர்த்துகிறதோ! என்று எண்ணியபடியே படுக்கையைவிட்டு எழுந்தேன்.



# ஆண்டாள்-அரங்கன்

டாக்டர். ஜி. நரசிம்மன் - அனந்தப்பூர். (ஆ.பி.)

இறைவனை மனத்தால் துதிப்போர் பலர். வாயால் பாடி ஆனந்திப்போர் சிலர். மனத்தால் நினைத்து வாயால் பாடி எம்பெருமானை துதிப்பவர் ஒரு சிலர். 'அரங்கற்கு பன்னு திருப்பாவை பல் பதியம்' செய்தளித்த ஆண்டாள் மூன்றும் பிரிவைச் சேர்ந்தவராவார்.

'அன்னவயல் புதுவை ஆண்டாள்' என்றும் 'இன்னிசையால் பாடிக்கொடுத்தாள்' என்றும் 'சூடிக்கொடுத்தாள்' என்றும் புகழ்பெற்ற ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாரின் திருமகளாக அவதரித்தார். அவளின் பக்திப் பெருக்கு பிறந்தநாள் தொட்டு இறைவனை மிகவும் நெருங்கிக் கொண்டே வந்தது. பருவமடைந்த பிறகு 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என உறுதி பூண்டாள். வடபெருங் கோயிலுடையானைத் தழுவி முழுசி பரிமாற வேண்டும் எனும் ஆற்றாமை கரை புரண்டது. அப்பெருமானிடம் சென்றக்கால் அவன் முகங்கொடாது இருந்தான். திருவுலகை அளந்ததின் பொருட்டு களைப்பாலே சாய்ந்து கிடக்கின்றான் போலும் என எண்ணித் தன் திருமுலைத் தடங்கலாலே அப்பெருமானை நெருக்கினாள்; பயனில்லை. விசிறி முதலியவற்றால் சேவை செய்தும் எம்பெருமான் எழுந்திருக்கவில்லை. பின் யாது செய்வது? என வருந்தினாள். இனி அவன் உலாவின அடிச்சுவடும், அவனும் பெண்களுமாய்த் திளைத்த யமுனையும், அவன் எடுத்த கோவர்த்தன மலையும் கிடந்ததாகில் அவற்றைப் பார்த்தாகிலும் உயிர் வாழ்வோம் எனில் அவ்விடங்களுக்குச் செல்ல பலமில்லாமையாலே கலங்கினாள். ஜனகனின் திருமகளைப் போல் வில்லும் நப்பின்னைப் பிராட்டி போல ரிஷபங்களையும் பெற்றிலனே என வருந்தினாள். இறுதியாக ஸ்ரீகிருஷ்ணனை அனுசரிப்பதைக் காட்டிலும் அவனை



அனுசரித்த பெண்களை அனுசரித்தலே சாலச் சிறந்தது எனத் தீர்மானித்தாள்.

ஸ்ரீவில்லிபுத்தூரைத் திருவாய்ப் பாடியாகவும் ஆண்டுள்ள பெண்களை இடைப் பெண்களாகவும் வடபெருங்கோயிலை நந்தகோபன் திருமாளிகையாகவும் வடபெருங்கோயில் உடையானை ஸ்ரீகிருஷ்ணனாகவும் பாவித்து இடைப் பெண்கள் நோற்ற நோன்பைத் தான் நோற்றாள்.

ஸ்ரீமந் நாராயணன் தர்மத்தை நிலைநிறுத்தும் பொருட்டு எடுத்த அவதாரங்களுள் கிருஷ்ண அவதாரமும் ஒன்றாகும். தேவகியின் மைந்தனாகப் பிறந்து யசோதையின் அன்புக் குழந்தையாக வளர்ந்தவன். ஆயர்பாடியில் வாழும் மக்கள் 'கிருஷ்ணன் இளையவனாகவும் இருக்கின்றான் மேலும் துஷ்டனாகவும் இருக்கின்றான். இவனிடத்தில் நம் பெண்களைப் பழக நேரிட்டால் தீங்கு விளையுமோ' என எண்ணித் தம் பெண்களை நிலவரையில் அடைத்து வைத்தனர். அவ்வமயம் வருணதேவன் மழைபொழியாமல் நிறுத்திவிட்டான். அப்போது அங்குள்ள ஆயர்கள் எல்லாம்கூடி 'மழைபொழிய வேண்டுமானால் பெண்கள் நோன்பு நோற்க வேண்டும்' எனவே இதற்கு கிருஷ்ணனே தகுந்த தலைவன் என உறுதிபூண்டனர். ஸ்ரீகிருஷ்ணன் தலைவனாய் இருக்கவேண்டும். மேலும் நோன்பிற்குத் தேவையான பொருட்களைப் பெற்றுத் தரவேண்டும் எனவும் முடிவு செய்தனர். தம் பெண்களை அவனிடம் ஒப்படைத்துவிட்டு அகன்றனர். அங்கு இடைப் பெண்கள் சிறிது நேரம் விளை

யாடி விட்டு உறங்கச் சென்ற னர். கிருஷ்ணனும் நப்பின்னை பிராட்டி இல்புகுந்து உறங்கச் சென்றான். இடைப்பெண்கள் கிருஷ்ணனைப் பிரிந்து உறங் கமுடியாமல் தவித்தனர். பின் நந்தகோபன் திருமாளிகை முன் நின்று கிருஷ்ணனை எழுப்பித தங்கள் அபேஷிதமாகிற கைங் கர்யத்தை பெற்று முடித்தார் கள். ஆண்டாளும் தன்னை இடைப்பெண்களுள் ஒருத்தியாக பாவித்துச் சங்கத் தமிழ் மாலை முப்பதும் தந்தாள்.

திருப்பாவையில் கண்ண னின் பெற்றோர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. தேவகி, போஜ குலத்தனவா கிய தேவகனுக்கு மகளாகத் தோன்றி வசுதேவரை மணந் தாள். இவள் வயிற்றில் உதிக் கும் எட்டாவது குழந்தையால் கம்சனுக்கு மரணம் ஏற்படும் ன அசரீரி கூறக்கேட்டு கம் சன் அவர்களைச் சிறையில் அடைத்தான். எட்டாவதா கக் கண்ணன் பிறந்து இடம் விட்டு மாறி மாயையை வரு வித்தனன். கம்சன் குழந்தை யைக் கொல்ல மேலேறிய அது அவனைப் பார்த்து நகைத்து உன்னைக் கொல்ல வந்த கண்ணன் நந்தகோபன் வீட் டில் உள்ளான் எனக்கூறி மறைந் தது. ஆயர்பாடியில் நந் தகோபனும் அவன் மனைவி யான யசோதையும் கண்ணனை கண்ணை இமை காப்பது போன்று காத்து வந்தனர். திருப்பாவையில்,

"ஒருத்தி மகனாய் பிறந்தோ
ரிரவில்
ஒருத்தி மகனாய் யொளித்து
வளர" (25: 1-2)

என வருகின்றது. வளர்ப் புத் தந்தையான நந்தகோப னைப் பற்றி,

"கூர்வேல் கொடுந் தொழிலன்
நந்தகோபன்" (1:4)
"அம்பரமே தண்ணீரே சோறே
அறஞ் செய்யும்
எம்பெருமான் நந்தகோபாலா..."
(17:1-2)

என விளககப்பட்டுள்ளது. வளர்ப்புத் தாயான அசோ தையை விளக்குமிடத்து,

"ஏரார்ந்த கண்ணி யசோதை
யிளஞ்சிங்கம்" (1:5)

"கொம்பனார்க் கெல்லாம்
கொழுந்தே குலவிளக்கே
எம்பெருமாட்டி யசோதா யறிவுறாய்"
(17:3-4)

எனவும் வருகின்றது.

## திருமால் :

எல்லாம்வல்ல எம்பெருமான் நீலவர்ணமுடையவனாய், சங்கு சக்கரம் தாங்கியவனாய் சார்ங் கம் எனும் வில்லை தரித்தவ னாய் வாள், தண்டு, பாஞ்சசந் நியம் பெற்றவனாய் விளங்கு கின்றான்.

திருமாலின் கோயிலை, பட்சி களுக்கு அரசனான கருடாழ்வா னுக்கு ஸ்வாமியான ஸர்வேஸ் வரன் சந்நிதி எனும் பொருளில்,

புள்ளரையன் கோவில் (6:1)
என கூறப்பட்டுள்ளது.

திருமால் மேகத்தைப் போன்று கருநிறம் கொண்ட வன் எனும் செய்தி,

"கார்மேனி" (1:6)
". . . . . . . ஆழிமழைக்கண்ணா"
"ஆழியுள் புக்கு முகந்துகொடு
ஆர்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல்
மெய்கறுத்து" (4:1-3)
முகில் வண்ணன் (11:6)

எனவும், அவனுடைய கண்கள் தாமரை மலரைப் போன்று செந் நிறம் கொண்டவனாக விளங் குகின்றன, எனும் செய்தி

"செங்கண்" (1:6)
"பங்கயக் கண்ணன்" (14:8)
"கிங்கிணி வாய்ச் செய்த
தாமரைப்பூப்போல"
செங்கண்" (22:4-5)

எனவும், எம்பெருமானின் திரு முகம் சூரியனைப் போன்று வெம்மையும் சந்திரனைப் போன்று தன்மையும் கொண்ட வனாக விளங்குகின்றன எனும் செய்தி,

"கதிர் மதியம் போல் முகத்தான்"(1:6)

எனவும், கைகளில் சங்கும் சக்க ரமும் தரித்த சக்கர தாரியாய் விளங்கும் அழகை,

பாழியந் தோளுடைய
பற்பநாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல்
நின்றதிர்ந்து" (4:4-5)
"வெள்ளை விளி சங்கு" (6:2)
"சங்கொடு சக்கரம் ஏந்தும்
தடக்கையன்" (14:7)
"பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச
சன்னியமே
போல்வன சங்கங்கள்" (26:4-5)

எனவும் விளக்கப்பட்டுள்ளது.

## வீரச் செயல்கள்

எம்பெருமான் எடுத்த அவதா ரங்களுள் கண்ண, இராம மற் றும் வாமனவதாரங்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

### கண்ணன் (கிருஷ்ண அவதாரம்)

கண்ணன் ஆய்பாடியில் அசோதையின் வீட்டில் வளர்ந் தபோது புரிந்த வீரச்செயல்கள் பற்றித திருப்பாவையில் விளக் கப்பட்டுள்ளது.

(1) பூதனை எனும் அரக்கி கம்சன் ஏவலால் கண்ணனைக் கொல்ல ஆய்பாடிக்கு சென றாள். வஞ்சனையால் முலைப்

பாலுடன் விஷத்தையும் ஊட்ட முயற்சித்தாள். கண்ணன பாலுண்ணத் தொடங்கி அவள உயிரையும் சேரத்துக் குடித்து விட்டான்.

"பேய்முலை நஞ்சுண்டு" (6:3)

(2) 'பகன்' என்பவன் கம்சனால் கண்ணனைக் கொல லவந்த அசுரன். அவன் கொக்குருவம் கொண்டு கண்ணனைக கொல்ல வாய் அக்கினி போல் கொளுத்தியதால், கண்ணன் அதன் வாயைப் பிளந்து அசுரனைக் கொன்றுன்.

'புள்ளின்வாய் கீண்டானை' (13:1)

(3) 'வற்சாசுரன்' கம்சன் ஏவலால் கண்ணனை வஞ்சிக்க பசுங்கன்றின் உருவங்கொண்டு கன்றுகளுடன் மேய்வதுபோல் நடித்துக் காலம் பார்த்து இருந்தான். இதனை அறிந்த கண்ணன் இவனருகில் சென்று காலைப் பிடித்துத்தூக்கி விளா மரத்தின் மீது எறிந்து மாயத்தான்.

'கன்றுகுணிலா வெறிந்தாய்' (24:4)

(4) வடமதுரைக்கருகே உள்ள மலை கோவர்த்தனகிரி எனப்படுகின்றது. இந்திரன் கண்ணனிடம் மாறுபாடு கொண்டதால் இந்திரன் கோபமடைந்து ஆக்களை வருத்த எண்ணி மழை பொழியாது நிறுத்தினன். கோகுலர்களையும் ஆக்களையும் அவற்றின் கன்றுகளையும் காக்க எண்ணி கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தான்.

'குன்று குடையா வெடுத்தாய்
குணம் போற்றி' (24:5)

(5) கண்ணன் குழந்தை வடிவாய் தொட்டிலில் இருக்கையில் அவனை அழிக்கும்பொருட்டு பாண்டிலின் உருவாய் வந்து வஞ்சனை இயற்றக் கருதினான் சகடாசுரன், குழந்தைகள் இயல்பாகக் காலில் உதைப்பது போன்று, கண்ணன் உதைத்து அவ்வசுரனை அழித்தான்.

'கள்ளச் சகடம் கலக்கழிய
காலோச்சி' (6:4)

'பொன்றச் சகடம் முதைத்தாய்
புகழ் போற்றி' (24:3)

(7) கம்சனால் ஏவப்பட்டு மல் யுத்தத்திற்கு வந்த சாணூரதனை வதைத்து சுபலனையும் தோசனையும் காலால் மோதி உயிர் போக்கினான் கண்ணன்.

"மல்லரை மாட்டிய,
தேவாதி தேவன்" (8:6-7)

## இராமன் (இராமவதாரம்)

இரகுகுல திலகமான இராமன் தந்தையின் கட்டளையைச் சிரமேற்கொண்டு கானகத்திற்குச் சென்றுன். அங்கு சீதை இராவணனால் கவர்ந்து செல்லப்பட்டாள். இராமபிரான் தன் இளவலான இலக்குமனனுடனும் சுக்ரீவன் படை உதவியுடனும் இலங்கை வேந்தனான இராவணனை அழித்து கற்பிற்கு இனியாளான சானகியை மீட்டான்.

"சினத்தினால் தென்னிலங்கைக்
கோமானைச் செற்ற
மனத்துக் கினியான்" (12:5-6)

"சென்றங்குத் தென்னிலங்கை
செற்றாய் திறள் போற்றி" (24:2)

## வாமன் (வாமனவதாரம்)

ஸ்ரீமகாவிஷ்ணு எடுத்த அவதாரத்தில் ஐந்தாவதாக இடம பெறுவது வாமனவாதாரமாகும். 'வாமன்' காசிபருக்கும் அதிதிக்கும் மகனாகப் பிறந்தவன். இவன் மாபலி சக்கரவர்த்தியின் ஆணவத்தை அடக்கும்பொருட்டு அவனிடம் சென்று மூவடிமண் கேட்டு இரந்தான். தன் குலகுரு கூறியும் கேளாது எம்பெருமானார் கேட்ட மூவடி மண் அளிக்க ஒப்புக்கொண்டான. உடனே வாமனன விண்ணை ஓரடியாலும் மண்ணை ஓரடியாலும் அளந்து எஞ்சிய மூன்றுமடியை மாவலியின் தலைமீது வைத்து அளந்துகொண்டான்.

'ஓங்கி உலகளந்த உத்தமன்' (4:1)
'ஓங்கி உலகளந்த உம்பர்கோமான்'
(17:5-6)

'அன்றிவ் வுலக மளந்தாய்' (24:1)
'நெடுமால்' (25:5)

பட்டர் பிரான் கோதை சொனன சங்கத்தமிழ் மாலை முபபது பாசுரங்களில் எம்பெருமானின் திருவுருவ அழகும வீரச் செயலகள குறித்தும அழகாக விளக்கப்பட்டுள்ளது.



### பாரதமும் பதினெட்டும்

பாரதத்துக்கும், பதினெட்டு என்ற எண்ணுக்கும் நெருக்கமான தொடர்பு உண்டு.

பாரதப்போர் நடந்தது 18 நாட்கள்
பகவத் கீதை அத்தியாங்கள் 18
மகாபாரத அத்தியாயங்கள் 18 பர்வங்கள்
பாரதப்போர் படை 18 அசௌகிணி.

திரு.ஆர்.பி.சாரதி-சென்னை.

# ஆழ்வார்கள் பாசுரங்களில் அருந்தமிழ்

டாக்டர் ந. சுப்புரெட்டியார் - சென்னை.

'அமிழ்தினும் இனியது தமிழ்' என்பது பன்னெடுங்காலமாக வழங்கிவரும் கருத்து. 'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவதெங்கும் காணோம்' என்று கூறுவார் நம் தேசியகவி பாரதியார். பாவேந்தர் பாரதிதாசனோ 'தமிழ் என் உயிருக்கு நேர்' என்று போற்றுவார். 'இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர் விருந் தமிழ் தம் என்றாலும் வேண்டேன்' என்பார் தமிழ்விடுதூது ஆசிரியர். மேலும் அவர்,

'தித்திக்கும் தெள்ளமுதாய்
தெள்ளமுதின் மேலான
முத்திக் கனியே!
என் முத்தமிழே-புத்திக்குள்
உண்ணப்படுந்தேனே'

என்று போற்றி உரைப்பார். முத்தாய்ப்பாக திருமால் தமிழின் இனிமையால்

'பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங்கொண்டல்'

என்று சிறப்பித்துப் பேசப் பெறுவார்.

பக்தி இயக்கக் காலத்தில் குறிப்பாக ஆழ்வார்கள் அவதரித்த பிறகு தமிழ் அவர்களுடைய நெஞ்சில் தோன்றி பாசுரங்களாக வெளிவரும்போது ஆல்போல் தழைத்து அருகு போல் வேரூன்றியது. சிறப்பாக பக்தி நெறியும் பிரபத்தி நெறியும் பாசுரங்களில் கலந்து வெளிவரும் போது தமிழ் மேலும் ஏற்றம் பெற்றது. நம்மாழ்வார் கூறுவார்!

"மயர் வற மதி நலம் அருளின" இறையருளால் தம்மைக் கருவியாகக் கொண்டு பாசுரங்கள் வெளிவந்தன என்பதை,

"என்நெஞ்சத்து உள்ளிருந்து
இங்கு
இருந்மிழ்நூல் இவைமொழிந்து
வன்நெஞ்சத்து இரணியனை
மார்பு இடந்த வாட்டாற்றான்.."
(10.6.4)

[வாட்டாற்றான்-திருவட்டாறு என்ற தலத்தில் எழுந்தருளி இருப்பவன்.]
என்றும்,

"பண்ணார் பாடல் இன்கவிகள்
யானாய்த் தன்னைத் தான்பாடி
தென்னா என்னும் என் அம்மான்
. . . . . . . . . ." (10.7.5)

என்றும் ஆழ்வாரே தம் திருவாக்கால் கூறுதலால் இதனை அறியலாம். மேலும்,

"என் சொல்லால் யான்சொன்ன
இன்கவி என்பித்துத்
தன்சொல்லால் தான்தன்னைக்
கீர்த்தித்த மாயன்....." (7.9.2)

என்று இதனைத் தெளிவாகக் கூறுவதை அறியலாம. இதனால் தான் இவருடைய வாக்குகளைக்கொண்ட திருவாய்மொழி 'தமிழ்மறை' என்று போற்றப்பெறுகின்றது. தாம் இங்ஙனம் எம்பெருமானைப் பாடிய பேற்றினைப் பெறற்கரிய பேறாகக் கருதுகின்றார் ஆழ்வார்.

"கண்டவாற்றால் தனதே
யுலகென நின்றான் தன்னை
வண்டமிழ் நூற்க நோற்றேன்
அடியார்க்கு இன்பமாரியே"
(4.5.10)

என்ற இவர்தம் வாக்காலேயே அறியலாம்.

## திவ்விய தேசங்கள் :

வைணவ திவ்விய தேசங்கள் 108ம் வைணவ தத்துவத்தையே விளக்கி நிற்கின்றன. ஒரு திவ்விய தேசத்தில் வாழ்பவர்கள் 'சித்து' என்ற தத்துவத்தையும் திருக்கோயில் கொண்டிருக்கும் சூழ்நிலை 'அசித்து' என்ற தத்துவத்தையும் அங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் 'ஈசுவரன்' என்ற தத்துவத்தையும் விளக்கி நிற்கின்றன. அதனால் தான் 'திருத்தலப் பயணம்' இறையனுபவம் பெற்றதாக அமைகின்றது. இதனால் எம்பெருமானின் படைப்பாகிய 'அசித்தையும்' வழிபடலாம் என்றாகின்றது. எழிலார்க்கு இயற்கை வளங்களை கூறும் பாசுரங்களில் அருந்தமிழ் பொலிவு பெறுவதைக் கண்டு மகிழலாம். திவ்விய தேசங்களை வருணிக்கும் பொழுது ஆழ்வார்கள் நுவலும் காட்சிகள் இன்றும் நாம் அப்பகுதிகளில் காணக்கூடியவையாக உள்ளன. எடுத்துக்காட்டாக திருப்பிருதியை வருணிக்கும் திருமங்கையாழ்வான்

"ஆலி மாமுகில் அதிர்தர
அருவரை அகடுற முகடேறிப்
பீலி மாமயில் நடஞ்செயும்
தடஞ்சுனைப் பிரிதி
சென்றடைநெஞ்சே! (1.2.1)

என்று கூறுவார். இதில் உயர்வு நவிற்சியாதும் இல்லை. வானம்

இடித்து மழைபொழிய மலைச் சிகரங்களில் அமர்ந்து மயில்கள் தோகை விரித்தாடும் இடம் பிரிதி என்னும் திவ்விய தேச மாகும்.

வதரி என்ற திவ்விய தேசத்தைச் சேவிக்கும்போது,

"விலங்களில் உரிஞ்சி மேல்நின்ற
விசும்பில்
வெண் துகில் கொடியென விரிந்து
வலந்தரு மணிநீர்க் கங்கையின்
கரைமேல்
வதரியாச்சிரமத்துள்ளானே"
(1.4.3)

என்று பேசுவார். மலையிலிருந்து இழிதரும் கங்கையின் வெண்ணிய அருவி வெண் துகில் கொடிபோல் உள்ளது என்கின்றார்.

திவ்வியப் பிரபந்தம் அவதரித்த திருக்கோவலூரின் வருணனையில் ஆழ்வாரின் அருந்தமிழ் இயற்கைப் பொலிவுடன் கொஞ்சுலைக் காணலாம்.

"எழுந்தமலர்க் கருநீலம்
இருந்தில் காட்ட
இரும்புன்னை முத்தரும்பிச்
செம்பொன் காட்ட
செழுந்தடநீர்க் கமலம்தீ
விகைபோல்காட்டும்
திருக்கோவலூர்" (2.10.3)

[கருநீலம்-நெய்தல்; இருந்தில்-கரி போல்; தீவிகை-விளக்கு]

"கருங்கமுகு பசும்பாளை
வெண்முத் தீன்று
காயெல்லாம் மரகதமாய்ப்
பவளம் காட்ட
செருந்திமிக மொட்டலர்த்தும்
தேன்கொள் சோலைத்
திருக்கோவலூர்....." (2.10.7)

[கமுகு-பாக்கு; செருந்தி-சுர புன்னை]

என்ற இடங்களில் இயற்கை வருணனை எழிலுடன் திகழ்கின்றதைக் காணலாம்.

சீராமவிண்ணகரம் என்ற திருத்தலம்,

"அவ்வாய வாள்நெடுங்கண்
குவளை காட்ட
அரவிந்தம் முகம் காட்ட
அருகே ஆம்பல்
செவ்வாயின் திரள் காட்டும்
வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே
(3.4.5)

[அவ்வாய-அப்படிப்பட்ட; அரவிந்தம்; ஆம்பல்-அல்லிமலர்; திரள்-கூட்டம்]

என்ற பாசுரத்தில் அழகு கொழிக்கும் பாங்கில் காட்டப் பெறுவதைக் கண்டு மகிழலாம்.

## கண்ணன் குழலூதும் காட்சிகள் :

இவற்றைச் சித்திரிக்கும் பெரியாழ்வார் பாசுரங்கள் அற்புதமானவை. தமிழின் குழைவும் குழலின் இனிமையும் மானசீகமாகத் தோன்றும் கண்ணனின் காட்சியும் நம் உள்ளத்தைக் கனிவிப்பனவாகவுள்ளன.

"சிறுவிரல்கள் தடவிப்பரி மாறச்
செங்கண் கோடச் செய்யவாய்
கொப்பளிப்ப
குறுவெயிர்ப்புரு வங்கூட லிப்ப
கோவிந்தன் குழல்கொடுதின
போது
பறவையின் கணங்கள்
கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள்
கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்திரங் கிச்செவி
யாட்கில்லாவே" (3.6.8)

என்ற பாசுரத்தில் கண்ணன் குழலை இயக்கும் காட்சியும் அந்த இன்னோசையால் பறவை இனங்களும் பசுத்திரள்களும் இசை மயமான அன்புச் சங்கிலியால் ஆம்புண்ட காட்சியும் நம் உள்ளத்தை கொள்ளை கொள்ளுகின்றன. அந்த வேய்ங்குழலோசையால்,

"மருண்டுமான் கணங்கள் மேய்கை
மறந்து
மேய்ந்த புல்லும்கடை
வாய்வழி சோர
இரண்டு பாடும்துலுங் காப்புடை
பெயரா
எழுதுசித்திரங்கள் போல
நின்றனவே" (3.6.9)

[இரண்டுபாடு-முன்னும் பின்னும்; துலுங்கா-அசையாமல்; புடைபெயரா-பக்கத்திலும் இடம் பெயராமல்]

கீதவெள்ளம் பெருகியதும் மான்கள் மேய்வதை மறக்கின்றன; மேய்ந்த புல்லும் கடைவாய் வழியே நழுவுகின்றது. இன்னும் வேணுகோபாலனின், இனிய குழல் ஓசையால் இயற்கை மோகினியே சொக்கிவிடுகின்றாள். இதோ அந்தக் காட்சி;

"மரங்கள் நின்றுமது தாரைகள்
பாயும்
மலர்கள் வீழும்வளர்
கொம்புகள்தாழும்
இரங்கும் கூம்பும் திருமால்
நின்ற நின்ற
பக்கம் நோக்கி அவை
செய்யும் குணமே" (3.6.10)

இதில் ஆய்ச்சியர்களின் காதலன் இயற்கையின் காதலாகிவிற்ற அற்புதத்தைக் காண்கின்றோம்.

## குலசேகராழ்வாரின் சொல்லோவியங்கள் :

தேவகியாகவும் தயரதனாகவும் நின்று பாசுரங்களில் ஆழ்

வாரின் ஒட்ட உணர்தல் (Empathetic feeling) என்ற நிலையைக் காணலாம். கண்ணன் செய்த சிறு குறும்பினை நினைக்கின்றாள் தேவகி. எங்ஙனம்?

"முழுதும் வெண்ணெய்
அளைந்து தொட்டுண்ணும்
முகிழி ளஞ்சிறுத் தாமரைக்கையும்
எழில்கொள் தாம்புகொண்டு
அடிப்பதற்கு எள்கும்
நிலையும் வெண்தயிர்
தோய்ந்தசெவ் வாயும்
அழுகை யும்அஞ்சி
நோக்கும்அந் நோக்கும்
அணிகொள் செஞ்சிறு
வாய்நெளிப் பதுவும்
தொழுகை யும்இவை
கண்ட அசோதை
தொல்லை இன்பத்து
இறுதிகண் டாளே" (7;8)

என்ற பாசுரத்தை பாடிப்பாடி மகிழத்தக்கது. வெண்ணெய் திருடியதற்காக யசோதைப்பிராட்டி குழந்தைக் கண்ணனை அச்சுறுத்துவதும், அவன் அஞ்சுவது போல் நடிப்பதுவுமான காட்சிகளை நாம் மானசீகமாகக் காணும் போது நாமும் தொல்லை இன்பத்து இறுதியைக் காண்கின்றோம். இதில் கொஞ்சும் தமிழும் நம்மை மிகவும் ஈர்க்கின்றது.

இங்ஙனமே ஆழ்வார் தசரதனாக நின்று புலம்புவதாக அமைந்த,

"கொல்ல ணைவேல் வரிநெடுங்கண்
கௌசலைதன்
குலமதலாய்! குனிவில் ஏந்தும்
மல்ல ணைந்த வரைத்தோளா!
வல்வினையேன்
மனமுருக்கும் வகையே கற்றாய்
மெல்ல ணைமேல் முன்துயின்றாய்
இன்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழல்
கல்ல ணைமேல் கண்துயிலக்
கற்றனையோ
காகுத்தா! கரிய கோவே!" (9:3)

என்ற பாசுரம் படிப்போரின் நெஞ்சினை நீர்ப்பண்டமாக உருக்கும் தன்மையது. இராமன் தசரதனுக்கு உயிர் போன்றவன் என்பதை ஆழ்வார் நமக்கு அற்புதமாகக் காட்டுகின்றார். பாசுரத்தின் தமிழும் நமக்கு அமுதமாக இனிக்கின்றது.

## ஆழ்வார்களின் அகத்துறைப் பாசுரங்கள் :

ஆழ்வார்கள், குறிப்பாக நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகியோரின் பாசுரங்கள் இருவகையாக அமையும். தானான தன்மையில் நின்று பேசுவதாக அமைந்த பாசுரங்கள், பெண் பாவனையை ஏறிட்டுக் கொண்டு பிராட்டியாக நின்று பேசும் பாசுரங்கள் என்பவை அவை. ஆழ்வார்கள் ஞானநிலை முறுகிநின்ற பொழுது முன்னவை பிறந்தன; பிரேமநிலை மீதூர்ந்து நின்ற பொழுது பின்னவை தோன்றின. இதனை ஆசாரிய ஹிருதயம்,

'ஞானத்தில் தம்பேச்சு
பிரேமத்தில் பெண்பேச்சு (118)

என்று குறிப்பிடும். திருவாய்மொழியிலுள்ள 27 பதிகங்கள் அகத்துறைப் பதிகங்களாக அமைந்துள்ளன. திருமங்கையாழ்வாரின் அருளிச்செயல்களிலும் 27 என்று எண் வகையில் சிலர் பொருத்திக் காட்ட முயன்றாலும் தாய்ப்பாசுரமாக வரும் பன்னிரண்டு பதிகங்களில் மூன்று பதிகங்கள் யசோதைப் பிராட்டியினுடையனவேயன்றி பரகால நாயகியுடையவை அன்று.

இவற்றுள் ஒருசில துறைகளில் வரும் பாசுரங்களைச் சுட்டி ஆழ்வார்களின் முறுகிய பிரேமத்தையும் தமிழின் குழைவையும் நளினத்தையும் காட்டுவேன்.

திருவிருத்தத்தில் 'வெறிவிலக்கு' என்ற துறையில் வரும் ஒருபாசுரம்:

'சின்மொழி நோயோ கழிபெருந்
தெய்வம் இந்நோய் இனதென்று
இன்மொழி கேட்கும் இளந்தெய்வம்
அன்றுஇதுவேல! நில்நீ
என்மொழி கேண்மின் என்அம்மனை
மீர்!உல கேழும் உண்டான்
சொன்மொழி மாலையந் தண்ணந்
துழாய்கொண்டு சூட்டுமினே"
(20)

[சின்மொழி-சிலபேச்சுகளே பேச வல்லவள்; கழிபெரு-மிகப் பெரிய; இனது-இப்படிப்பட்டது; சொல்மொழி-திருநாமத்தைச் சொல்லுதல்]

"வேலனுக்கு வெறியாட்டு எடுப்பது வீண். இதனைத் தவிர்த்து உலகம் உண்ட பெருவாயனுடைய திருநாமங்களை இவள் செவியில் படுமாறு சொல்லுங்கள்: அவன் மாலையில் திகழும் திருத்துழாய்ப் பிரசாதத்தைக் கொணர்ந்து கொடுங்கள். இதுவே இவளுடைய நோய்க்கு ஏற்ற மருந்து" என்கின்றாள். தோழி 'மறந்தும் புறந்தொழாத மாந்தர்' வழிவந்தவளாதலால் இளந்தெய்வ வழிபாட்டை நீக்கி கழிபெருந்தெய்வத்தை வழிபடுமாறு கூறுவது எண்ணி மகிழத்தக்கது.

பெருமாள் திருமொழியில் 'ஊடல்' என்ற துறையில் அமைந்த ஒருபாசுரம்; ஊடல் என்பது கணவன் மனைவிய

ரிடையே நிகழும் ஒரு சிறு பிணக்கு.

"கருமலர்க் கூந்தல் ஒருத்தி
தன்னைக்
கடைக் கணித்து ஆங்கே
ஒருத்திதன்பால்
மருவி மனம்வைத்து மற்றொருத்திக்கு
உரைத்து, ஒருபேதைக்குப்
பொய் குறித்து,
புரிகுழல் மங்கை ஒருத்திதன்னைப்
புணர்தி அவளுக்கும்
மெய்யன் அல்லை
மருதுஇறுத் தாய்உன் வளர்த்தியூடே
வளர்கின்ற தால்உன்தன்
மாயைதானே" (6:3)

[கடைககணித்து-கடைக்கண்ணல்பார்த்து; மருவி-பொருந்தச் செய்து: பேதை-பெண்; புரிகுமல்-சுருண்ட குழல்; புணர்தி-கலவிசெய்தாய்; மாயை-கள்ளம், கவடுகள்]

ஆய்ச்சியர் ஊடி கண்ணனை எள்கும் பாணியில் ஆழ்வார் நாயகி பேசுவது.

'உடன்போக்கு' என்றதுறையில் பெரியாழ்வார் திருமொழியில் அமைந்த பாசுரம் இது. தலைவன் தோழியின் துணை கொண்டு தலைவியை நள்ளிரவில் தன் மனைவியிடத்துக கூட்டிச் செல்லல் உடன் போக காகும்.

'நல்லதோர் தாமரைப் பொய்கை
நாண்மலர் மேற்பனி சோர
அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு
அழகழிந் தாலொத்த தாலோ?
இல்லம் வெறியோ டிற்றாலோ?
என்மகளை எங்கும் காணேன்;
மல்லரை அட்டவன் பின்போய்
மதுரைப் புறம்புக் காள்கொலோ?
(3.8:1)

[பொய்கை-குளம்; சோர-பெய்ய; அல்லி-உள்ளிதழ்; தாது-மகரந்தம்; வெறிஓடிற்று- வெறிச் சென்றுள்ளது; மல்லர்-சாணூரன், முஷ்டிகன்]

இது தாய்ப்பாசுரமாகச் செலலுகினறது. "என் பெண்பிள்ளை நீங்கின வீடு தாமரைப் பூக்களிலுள்ள இதழ்கள் உதிரப் பெற்றதனால் தாமரைப் பொய்கை அழகழிந்து தோற்றுவது போலுள்ளது. இவள் போனவிடம் இன்னதென்று தெரியவில்லை. ஒரு நாள் கண்ணனுடன் கூடித் திருவாய்ப் பாடிக்குச் சென்றிருப்பாளோ?" என்று திருத்தாயார் ஐயமுற்றுக் கூறுகின்றாள். திருமாளிகையில் பெண்பிள்ளை இருந்தது ஓரடி நிலமானாலும், வீடு முழுவதும் அவளே இருந்ததாகத் தாய்க்குத் தோன்றிக் கிடந்தபடியால் 'இல்லாம் வெறிசோடிற்றதாலோ?' என்கின்றாள்.

ஐயங்களெல்லாம் இரண்டு இடங்களைப் பற்றிப் பிறக்குமாதலால் இங்குக் கம்சன் இருப்பிடமான மதுரையில் புகுந்தாளோ? அன்றி அதன் அருகிலுள்ள திருவாய்ப்பாடியிற் புகுந்தாளோ? என்று ஐயமுற்றதாகக் கொள்ளவேண்டும். ஒருவருக்கொருவர் பண்ணுகின்ற காதல் விளையாட்டுகளினால் இருவரும் மயங்கி மெய்மறந்து கம்சன் நகரில் புகுந்தார்களாகில் தீராத் துன்பம் விளையுமே! என்ற ஐயந்தான் நெஞ்சினுள் நடமாடுவதாகக கொள்ள வேண்டும்.

சங்ககாலத்தமிழ் நெறியை ஆழ்வார் பெருமக்கள் தங்கள் பாசுரங்களில் பயன்படுத்தியிருக்கும் அருமைப்பாடு சொல்லுந்தரமன்று. வேதாந்தங்களில் குறிப்பிடப்பெறும் பக்தி ஆழ்வார்களிடம் காதல்முறையில் பரிணமித்து நிற்றலை அறிய முடிகின்றது. இவர்கள் எம்பெருமான் மீது கொள்ளும் காமம் 'பகவத் விஷயகாமம்' என்று வழங்கப்பெறும். இங்ஙனம் இவர்கள் மாதவன் மீது கொள்ளும் காமம் மங்கையர் மீது கொள்ளும் விஷய காமத்தினின்றும் மாறுபட்டது. ஆயினும் சிற்றின்ப அநுபவமாகிய காதலுக்கு (விஷய காமத்திற்கு)க் கூறப்பெறும் அகப்பொருள் துறைகள் யாவும் பகவத் விஷயகாமத்துக்கும் கூறப்பெறும்.

## நம்மாழ்வாரின் இறையநுபவம் :

ஆழ்வார் எம்பெருமானைத் தானான தன்மையால் இடைவிடாமல் நினைப்பதனால் உணடாகும் மகிழ்ச்சியே, இன்பப் பெருக்கே, திருவாய்மொழிப் பாசுரங்களாக வெளிப்பட்டது என்று கொள்ளலாம். ஆழ்வாருக்கு இறைவன் 'அப்பொழுதைக்கு அப்பொழுது ஆராவமுதமாக' இருப்பானா?' எண்ணம புகுந்து தித்திக்கும் அமுதமாக வும் இருப்பான்.

"தேனும் பாலும் கன்னலும்
அமுதும் ஆகித் தித்திப்ப,
யானும் எம்பி ரானையே
ஏத்தினேன்" (4.3.10)

என்று கூறுவர் ஆழ்வார். ஆழ்வாருக்கு "உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணனாகவே" (6.7.1) இருக்கும். இந்த எம்பெருமானை அநுபவித்த அநுபவமே ஆழ்வாரின் பாசுரங்களாயின.

"கண்டுகொண் டென்கண்
ணிணையாரக் களித்து
. . . . . . . . . . . . . . .
தொண்டர்க்கு அமுதுண்ணச்

சொன்மாலைகள்
சொன்னேன்" (9.4.9)

என்று அவரே கூறுவதைக் காணலாம். தாம் இங்ஙனம் எம்பெருமானைப் பாடிய பேற்றினைப் பெறற்கரிய பேறாகக் கருதுகின்றார்.

"கண்ட வாற்றால் தனதே
யுலகென நின்றான் தன்னை
வண்டமிழ் நூற்க நோற்றேன்
அடியார்க்கு இன்ப மாரியே"
(4.5.10)

என்று கூறுவதனால் இதனை யறியலாம்.

பக்தி நிறைந்த தமது உள்ளத்தில் இறைவனின் எண்ணற்ற கல்யாண குணங்களையும் அவன் அடியார்க்கு எளியனாம் தன்மையினையும் நினைந்து அவனது பேரருளைத் தூய்ப்பதாக நுவலும் பாசுரங்கள் பக்தர்கட்கு ஆரா அமுதமாக இனிக்கும்; தமிழின் குழைவும் நெகிழ்வும் தேனும் பாலும் கன்னலும் கலந்தாற் போலத் தித்திக்கும்; படிப்போர் நெஞ்சினை நீர்ப்பண்டமாக்கிவிடும் . எடுத்துக்காட்டுகளாக,

"மத்துறு கடைவெண்ணெய்
களவினில்
உரவிடை யாப்புண்டு
எத்திறம்! உரலினொடு
இணைந்திருந்து
ஏங்கிய எளிவே" (1:3:1)

"உன்னது என்னது ஆவியும்
என்னது உன்னது ஆவியும்
இன்ன வண்ண மேநின்றாய்
என்றுரைக்க வல்லேனே" (4.3.8)

"என்னமர் பெருமான் இமையவர்
பெருமான்
இருநிலம் மிடந்த வெம்பெருமான்
முன்னைவல் வினைகள் முழுதுடன்
மாள
என்னையாள் கின்றெம்
பெருமான்" (8.4.3)

என்ற பாசுரப்பகுதிகளைக் கொண்டு மகிழலாம். இவற்றை மீண்டும் மீண்டும் உளங்கரைந்து பாடி இக்கூறிய உண்மைகளைத் தெளியலாம்.

ஆழ்வாரின் பாசுரங்கள் முக்கியமாக வற்புறுத்துவது பிரபத்தி நெறி; சரணாகதி தத்துவம்.

" 'அகலகில்லேன் இறையும்' என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம் மூன்று
உடையாய்! என்னை ஆள்வானே
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்புந்திரு வேங்கடத்தானே
புகல்ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே"
(6.10:10)

என்ற பாசுரம் இந்நெறியைக் கூறும் பல பாசுரங்களுள் முத்தாய்ப்பான பாசுரமாகும். இது வேங்கடவாணன் மீது எழுந்த பாசுரமுமாகும். *

## இந்து மதத்தின் கோவில்கள் - நான்கு வகைகள்

இந்து மதத்தின் கோவில்கள் நான்கு வகைகள். (1) தைவிகம், (2) ஆசுரம், (3) ஆர்ஷம் (4) மானுஷம்.

தைவிகம் :

தேவர்கள் உருவாக்கிய கோவில்களை தைவிகம் என கூறப்படுகிறது. அவற்றில் காஞ்சியில் அன்னை காமாட்சி அமைத்த லிங்கம்.

ஆசுரம் :

அசுரர்கள் கொடிய அரக்க குணம் கொண்டு இருப்பினும் அவர்களும் இறைவனை பக்தியோடு வழிப்பட்டு உருவாக்கிய ஸ்தலங்கள் உண்டு. அவைகள்: திரிசிரன் உருவாக்கிய கோவில திருசிரபுரம் ஒணகாந்தன் - ஒணகாந்தன் தளிகோவில்.

ஆர்ஷம் :

ரிஷிகள் மூலவரை உருவாக்கிய ஸ்தலங்கள் குற்றாலம் - அகஸ்தியன், சிக்கல் - வஷிஷ்டர், திருக்களர் - துர்வாசர்.

மானுஷம் :

மன்னர் மக்கள், சித்தர்கள் உருவாக்கிய ஸ்தலங்கள் மானுஷம். பழனி - போகர் - சித்தர். மதுரை - பாண்டியன் - மன்னன்.

தொகுப்பு : பார்சன் செ. ரமேஸ் - மதுரை.

# சக்கரத்தாழ்வார் வைபவம்

டாக்டர். இரா.வ. கமலக்கண்ணன் - கீழ்ப்புத்தூர்.

தோற்றுவாய் :

ஸ்ரீமந் நாராயணனுடைய திருக்கரங்களில் சங்கு, சக்கரம், வில், வாள், கதை என்னும் பஞ்ச ஆயுதங்களும் விளங்குகின்றன. 'பாஞ்ச சன்யம்' என்னும் சங்கிணை மேல் இடத்திருக்கையிலும் 'சுதர்சனம்' என்னும் சக்கரத்தினை மேல் வலத் திருக்கரத்திலும், 'சார்ங்கம்' என்னும் வில்லினை, கீழ் இடத் திருக்கையிலும், 'கௌமோதகி' என்னும் கதையினை வலக் கீழ்த் திருக்கையிலும், 'நந்தகம்' என்னும் வாளினை திருவரையிலும், தரித்துள்ளார் பெருமான். இவற்றுள் சக்கராயுதம் குறிப்பிடத்தக்க பல பெருமைகளை உடையதாகும். என்வேதான் நம் வைணவ சமயத்தில் பரதாழ்வார், இளையாழ்வார், விபீஷண ஆழ்வார், சத்துருக்கனாழ்வார் என்று சிறப்பித்துக் கூறுவதுபோல, 'சக்கரத்தாழ்வார்', என்றும் பெருமையுடன் இவர் குறிப்பிடப்படுகிறுர். பஞ்ச ஆயுதங்களில் சக்கரத்தாழ்வாருக்கு மட்டும் தனிச் சந்நிதிகள் திருமால் ஆலயங்களில் அமைக்கப்பட்டுள்ளன. சக்கரத்தாழ்வார் பற்றிய பல பெருமைகளை இங்குத் தொகுத்துக் காண்போம்.




## சக்கரத்தாழ்வார் தனி ஆயுதமா?

சங்கு, வில், வாள், கதை முதலிய பிற ஆயுதங்களைப்போல சககரப்படையும் எம்பெருமானின் திருமேனியின் ஓர் அங்கமாகவே உள்ளது. இதனை,

காா்கலந்த மேனியான்
கைகலந்த ஆழியான்
பார்கலந்த வல்வயிற்றுன்
பாம்பணையான்-சீர்கலந்த
சொல்நினைந்து போக்காரேல்
சூழ்வினையின் ஆழ்துயரை
என் நினைந்து போக்குவர்
இப்போது? (பெரியதிருவந்தாதி-86)

என்னும் நம்மாழ்வார் திருவாக்கால் அறியலாம்.

பகவத் கீதையில் கண்ணன் எம்பெருமான் பின்வருமாறு குறிப்பிடுகிறுர். 'வேதங்களுள் நான் சாமவேதம், -வாக்குகளுள் நான் பிரணவம்; யானைகளுள் நான் ஐராவதம்; ஆயுதங்களுள் நான் வஜ்ஜிராயுதம்' இவ்விடத்து இருபத்தெட்டாம் சுலோகத்தின் கீழுள்ள விளக்கத்தைக் காண்போம்.

"விஷ்ணுவினுடைய ஆயுதங்

களாகிய கதை, சக்கரம், ஆகியவைகளை பகவான் இங்கு குறிப்பிடவில்லை. ஏனென்றால் அவைகள் உண்டு பண்ணபபட்டவைகள் அல்ல. ஈசுவர சொரூப லட்சணத்தில் அவைகள் நித்தியமாய், உருவகமாய் அடங்கப்பெற்றவைகள்''.

(சுவாமி சித்பவானந்தர் அருளிய ஸ்ரீமத் பகவத் கீதை பக்:516 வியாக்யானம்)

பெரியாழ்வார் எம்பெருமானுக்கும், மகாலட்சுமிக்கும் பல்லாண்டு கூறி வாழ்த்துமிடத்து,

'வடிவார் சோதி வலத்துறையும்
சுடராழியும் பல்லாண்டு'

என்று சக்கரத்தாழ்வாரைப் போற்றுகிறார்.

குலசேகராழ்வார் தம் பெருமாள் திருமொழியில்,

"கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம்
கூனற் சங்கம்
கொலையாழி கொடுந்தண்டு
கொற்ற ஒள்வாள்"
பெருமாள் திருமொழி -(1:8)

என்று திருமாலின் ஐம்படைகளையும் குறிக்குமிடத்து 'கொலையாழி' என்று குறிப்பிடுகிறார். திருமழிசையாழ்வாரும் 'வெய்ய ஆழி' என்கிறார் (திருச்சந்தவிருத்தம்-97). திருப்பாணாழ்வாரும் 'அனல் ஆழி' என்கிறார் (அமலனாதிபிரான்-7) திருமங்கை ஆழ்வாரும் 'மின்னும் ஆழி' என்கிறார். (பெரியதிருமொழி 3:1:1). ஸ்ரீ ஆண்டாளும், மேகம் திரண்டு, மின்னல் மின்னி, மழை பொழிய வேண்டும் என்று வேண்டுமிடத்து,

'........பத்மனாபன் கையில் ஆழிபோல்
மின்னி' (திருப்பாவை 4)

என்று மொழிகிறார்.

இதனால் சக்கரத்தாழ்வார் தீயோரை அழிப்பார் என்பது புலனாகிறது. அதே நேரத்தில் நல்லோரைக் காப்பார்.

## தீயோரை அழித்தல் :

சக்கரத்தின் ஒளி மேலும் மிகுமாறு நெய் பூசப்பட்டிருக்கும் என்பதைப் பெரியாழ்வார் பாசுரத்தால் அறிய முடிகிறது.

'நெய்த்தலை நேமியும் சங்கும்
நிலாவிய கைத்தலங்கள்'
-பெரியாழ்வார் திருமொழி (1:2:12)

மாலிகன் என்பவன் கண்ண பிரானிடம் வந்து தோழனானான். சுவாமி அவனுக்குச் சக்கராயுதப் பயிற்சி தவிர அனைத்து ஆயுதப் பயிற்சிகளையும் பயிற்றுவித்தார். இதனால் அவனுக்குச் செருக்கு ஏற்பட்டது. 'கண்ணா! நீ எனக்குச் சக்கரப் பயிற்சியை ஏன் கற்றுத் தரவில்லை?' என்று கேட்டான். அதற்குச் சுவாமி, 'அப்பா! அது உன்னால் ஆகாது' என்றார். அவன் மிகுந்த தருக்குடன், 'என்னால் முடியாதது எதுவுமில்லை' என்றான். அவனை அழிக்க இதுவே தருணம் என்றெண்ணிய பெருமான் சக்கரத்தைத் தன் கையருகே நிறுத்திச் சுழற்றிக் காட்டினார். மாலிகனும் அதேபோன்று சுழற்ற, சக்கரத்தால் அறுப்புண்டு இறந்தான்.

'சீமாலிகன் அவனோடு தோழமை
கொள்ளவும் வல்லாய்
சாமாறவனை நீ எண்ணிச்
சக்கரத்தால் தலைகொண்டாய்
ஆமாறறியும் பிரானே!
அணியரங்கத்தே கிடந்தாய்!
ஏமாற்றம் என்னைத் தவிர்த்தாய்!
இருவாட்சிப்பூச் சூட்டவாராய்'.
(பெரியாழ்வார் திருமொழி 2:7:8)

இவ்வாறே சிசுபாலன், வாணாசூரன் முதலிய தீயோரையும் அழிக்க ஆழிப்படை உதவிற்று.

கஜேந்தராழ்வாரைப் பற்றியிருந்த முதலையைத துணித்து, அவருக்குச் சுவாமி பரமபதம் அளிக்கத் துணையாய் இருந்ததும் சக்கரமே என்பது அனைவரும் அறிந்ததே. அவ்வாறே பாரதப போர் நடந்த பதினான்காம் நாள் அருச்சுனனையும் ஏனையோரையும் காத்து, செயத்திரதனை அழிக்க ஏற்ற சூழ்நிலையை உருவாக்கப் பெருமாள் சக்கரத்தையே ஏவினார் என்ற வரலாறும் நாம் அறிந்ததே. மேலும் மூன்றும் நாள் போரில் வீடுமன முனைந்து பொர, அருச்சுனன் விளையாட்டாகப் போர் செய்ய, இந்நிலையில் பாரத்தசாரதியாகிய பெருமான் தம் திருக்கையில் சக்கரத்தைத் தாங்கி, வீடுமன் மேல் பாய்ந்தார். இந்நிலையில் வீடுமன் பெருமானைத் தோத்திரம் செய்யவே, சுவாமி சினமடங்கித் திரும்பினார். இவ்வாறு தீயோரைச் சக்கரம் அழிப்பதால் இதற்குப் 'பகை அணங்கு ஆழி' என்று திருநாமம் இடுகிறார் இளங்கோவடிகள். "காட்டிலுள்ள சிறு தூறுகளை அக்கினி அழிப்பதுபோல, மற்ற ஆயுதங்களுக்கெல்லாம் அரசுபோல் விளங்கும் திருமாலின் சக்கராயுதமானது பகைவர்களை எல்லாம் அழித்து நம்மைக் காப்பாற்றும்'' என்று செவ்வைச் சூடுவார் பாகவதத்தில் கூறுகிறார். (ஆறும் ஸ்கந்தம்-நாலாம் அத்தியாயம் பாடல் -26)

## அடியாரைக் காத்தல்:

பரம பாகவதனான அம்பரீட்சனுக்குப் பெருமாள் தம் சக்கராயுதத்தைக் கொடுத்திருந்தார். மன்னன் ஓராண்டு ஏகாதசி விரதம் இருந்தான். மறுநாள் யமுனையில் நீராடி, மதுவனத்தில்

ஸ்ரீஹரியை வழிபட்டு, துவாதசி பாரணை செய்யத் தொடங்கினான். அப்போது, துருவாசர் அங்கு வரவே அவரை வரவேற்று, உணவு உண்ண அழைத்தான். அவர் நீராடி வருவதாகச் சென்றார். சென்றவர், துவாதசி கழியும் வரை வராமல் போகவே மன்னன் துளசி தீர்த்தத்தை அருந்தி பாரணை செய்தான். அவ்வளவில் அங்கு வந்த துருவாசர் நிகழ்ந்ததை உணர்ந்து வெகுண்டு ஒரு பூதத்தை உண்டாக்கி மன்னன் மீது ஏவினார். அவ்வளவில் மன்னனிடமிருந்த சக்கரம் பூதத்தை அழித்து முனிவரைத் துரத்தியது. முனிவர் மும்மூர்த்திகளிடமும் சென்று அபயம் வேண்டினார். அவர்கள் மறுத்து, அம்பரீடனையே சரணடையுமாறு கூறினர். முனிவரும் அவ்வாறே செய்ய, அம்பரீடன் சக்கரத்தாழ்வாரைப் பிரார்த்தித்து முனிவரைக் காக்க வேண்டினான்.

'தேவரீர் அக்கினி, சூரியன், ஜோதிக் கணங்களுக்கெல்லாம் பதியானவர். சந்திரன், பூமி, நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் - சப்தாதி விஷயங்களும் சுரோத்திராதி இந்திரியங்களும், தர்மமும், தைரியமும், சத்தியமுமாகி அசுரர்களை அழிப்பவராய், மூன்று உலகங்களையும் பாதுகாப்பவருமாய் இருக்கிறீர். நீர் பகவானால் துஷ்டர்களுடைய கண்டனத்தின் பொருட்டு நியமிக்கப்பட்டிருக்கிறீர். முனிவரைக் காப்பாற்றும்' என வேண்டினான்.

இவ்வாறே தொண்டைமான் சக்கரவர்த்திக்கும் போரில் உதவுவதற்காக திருமலைப்பெருமான் தன சங்கு சக்கரங்களைக் கொடுத்தார்.



### சக்கரத்தாழ்வாரின் அமைப்பு :

சுவாமி தேசிகன் தாம் புறச் சமயங்களைக் கண்டனம் செய்ய உதவிய சக்கரத்தாழ்வாரை ஸ்ரீசுதர்ஸநாஷ்டகம் என்னும் நூலில் மங்களாஸாஸனம் செய்கிருர். இவரே ஷோடாசாயுத ஸ்தோததிரம் என்னும் நூலில் சக்கரத்தாழ்வாரின அமைப்பைக் கூறுகிருர். இது 19 சுலோகங்களைக் கொண்டது. சக்கரத்தாழ்வாரின் 1. திகிரி, 2. மழு, 3. ஈட்டி, 4.

தண்டு, 5. அங்குசம, 6. அரனி ரூபாயுதம், 7. வாள, 8. வேல, 9. சஙகம், 10. வில், 11. பாசம, 12. கலப்பை, 13. வஜ்ராயு தம், 14. கதை, 15. உலககை, 16. திரிசூலம் ஆகிய 16 ஆயுதங்களுக்கும் 16 சுலோகங் களை அருளியுள்ளார். (2 முதல் 17 வரை) 1, 18 சுலோகங்கள் பொது. 19 பலன் கூறுவது. இந்த 16 ஆயுதங்களும் காஞ் சியில் சக்கரத்தாழ்வான் உற்ச வத் திருமேனியில் சேவைய ருளுகின்றன. இங்குள்ள மூல வர் நான்கு திருக்கரங்களும் ஒரு திருமுகமும் கொண்டவராகவும், அடுத்த பக்கத்தில் நரசிம்மர் நான்கு திருக்கரங்கள் உடையவ ராகவும் காட்சி அளிக்கினறுர்.

## தேவப் பெருமாள திருமேனியின் பாங்கு :

காஞ்சியில் பேரருளாளன் சேதநம், அசேதநம் என்னும் தத் துவங்களனைத்தையும் தமக்கு ஆபரணமாகவும், ஆயுதமாக வும் கொண்டு அத்திகிரி மேல் நின்று அருள் செய்கின்ருன் என்று சுவாமி தேசிகன் குறிப் பிடுகிருர். 'வேதப்பொருளாய் நிற்கும் பெருமான், ஜீவன் கௌஸ்துவமாகவும் மூலப்பிர கிருதி-ஸ்ரீவத்சவமாகவும மகான என்னும் தத்துவம் - கதை யாகவும் அஞ்ஞானம்-கத்தியின் உறையாகவும் தாமச அலங் காரம் வில் ஆகவும் சாத் துவிக அலங்காரம்-சங்கு ஆக வும் மனம் - சுதர்சனம் என்' னும் சக்கரமாகவும் இந்திரியம் 10-ஞானேந்திரியம் சன்மேந்தி ரியம் ஆகியன-அமபுகளாகவும் தன்மாத்திரங்கள் 5 பூதங்கள 5 ஆகியன -வனமாலையாகவும் இவ்வாறு சகலதத்துவங்களும் தனக்கு ஆயுதமாகவும், ஆபரண மாகவும் நிற்க அத்திகிரிமேல் நினறு அனைத்தையும் காககின் ருன் பேரருளாளன்' என்று தேசி கன போற்றுகிருர். (தேசிகப் பிரபந்தம் 80) 108 சம்ஹிதைக ளில் 'ஹகேந்த்ர சம்ஹிதையில்' சுதர்ஸன வழிபாடு, அதறகுரிய மந்திரம், யநதிரம் ஆகியவறறு டன் விவரமாகக் கூறுகிறது.

## இறுவாய் :

ஸ்ரீமகாவிஷ்ணு சாளககிராம ஸபடிகக் கற்களாக உருவம கொணடுள்ளார். இக்கறகள நேபாளத்தில் கண்டகி நதி தீரத தில கிடைக்கின்றன. நான்கு சக்கர இலச்சினையும் நீல நிற மும் பொருந்திய கற்களில் மேல் பாகம் வனமாலையுடன் உள ளது. இது இலட்சுமி நாரா யண வடிவமாகும. இரணடு சககர இலசசினையுடன உளள கறகள வாமன அமசமாகும. இரண்டு சககரமும் வனமாலை யும் கூடிய கற்கள் ஸ்ரீதர அம்சமாகும். இரண்டு சக் கர வடிவும், அம்பறுத்தூணி யும் கொண்ட கறகளின் அடி பாகம் அம்பு போலுளளது. இது இரணராமர் அம்சமாகும். ஒரேயொரு சக்கரம் மடடுமே உடையது சுதர்சன அம்சமாகும. அடுத்தடுதது பதினாலு சக்கரச சின்னஙகள் உடையது ஆதி சேஷ வடிவமாகும. இரண்டு சககரமும், பசுவின குளமபு அடையாளமும உடையது மது சூதனர் அம்சமாகும். இவ் வாறு சாளககிராமப் படிகக் கறகளில், இயறகை வடிவில் சககரத்தாழ்வார் பொலிநதிருக கிருர். 48 நாள் சககரததாழ வாரை வணஙகி வழிபடுவோர் துனபங்கள் நீங்கி, இனபங்கள பெருகி, நினைதத காரியங்கள் முடிந்து நலம் பெறுவர். அவவ கையில் நாமும அவரைப் போற் றுவோம. நலம பெறுவோம.

* * *

---

**தெரிந்துகொள்ளுங்கள் :**

## ஸ்ரீ வைஷ்ணவன் 12 திருநாமங்கள் இடும் இடங்கள்

1) நெற்றி. 2) வயிறு, 3) மார்பு, 4) உள் கழுத்து, 5) வயிற்றின் வலப்புறம், 6) வலக்கையின் மேல்புறம், 7) வலக்க ழுத்து, 8) வயிற்றின் இடப்புறம், 9) இடக்கையின் மேல்பாகம், 10) இடப்பக்கக்கழுத்து 11) முதுகின் அடிபாகம் 12) பிடரி.

மிகுதியைத் தண்ணீர் விட்டலம்பி தலையில் தரிக்க வேண் டும்.

மேற்படி 12 திருநாமங்களை இட்டுக்கொள்ளும்போது (ஒரு நாமம் இட்டுக்கொண்டாலும்) முறையே:

1. நாராயணய நம: 2. கோவிந்தாய நம: 3. மாதவாய நம: 4. விஷ்ணுவாய நம: 5. மதுசூதனாய நம: 6. திரிவிக்ரமனாய நம: 7. வாமணய நம: 8. ஸ்ரீதராய நம: 9. ரிஷிகேசாய நம: 10. பத்மநாபாய நம: 11. தாமோதராய நம: 12. வாசுதேவாய நம: என்று இப்படிச் சொல்லி இடுவதால் இவற்றிற்குப் பெயர் ஊர்த்தவப் புண்டரத் திருநாமங்கள் என்று பெயராயிற்று.

தொகுத்தவர் : கமலா மாரியப்பன் - கோவை.

# திருவரங்கத்து மாலையில் திருச்சக்கரம்

திரு. C. பன்னீர் செல்வம் - சென்னை.

இறைவன் உலகம் முழுவதையும் படைத்துக் காத்து, அழித்து தம் கட்டுக்கோப்பில் வைத்திருக்கிறார். அவர்தம் அத்தொழிலுக்கு உறுதுணையாயுள்ள ஆயுதங்கள் பஞ்சாயுதங்கள் எனப்படும்.

அவையாவன:-

| தமிழ் | வடமொழி |
|---|---|
| 1. சங்கு | - பாஞ்சசன்னியம் |
| 2. சக்கரம் | - சுதர்சனம் |
| 3. கதை | - கௌமோதகி |
| 4. வில் | - சாரங்கம் |
| 5. வாள் | - நாந்தகம் |

என்பனவாகும். இறைவன் பால் தீரா ஆசை கொண்டு திவ்ய பாசுரங்களை இயற்றிய அடியார் அழகிய மணவாளதாசர். மனிதக்கவி மொழியா மணவாள தாசர் திருமங்கையில் வாழ்ந்தவர். அவர் பாடிய திரு அரங்கத்து மாலையில் திருமாலின் திவ்யாயுதங்களில் திருச்சக்கரத்தைப் பெரிதும் போற்றியுள்ளார்.

ஆரவாரிக்கின்ற திருப்பாற்கடலில் திரு அனந்தாழ்வான் மீது யோக நித்திரை செய்தருள்கின்றான் இறைவன். அவ்வாறு நித்திரை செய்தருளும், பெரிய நிலவுசூலத்தில் இறங்கி வந்த சக்கராயுதத்தை உடைய மேகம் போல என அக்காட்சியை இறைவனை சக்கரத்தை உடைய மேகமாகக் "பேருலகில் இறங்காழி மேகம்" குறிப்பிடுகிறார்.

பேர் ஆயிரம், செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களும், திருக்கைகளும் ஆயிரமாயிரம், அருள்மழை பொழியும் திரு அடிகளும் ஆயிரம் அப்பேராயிரம் கொண்ட பெம்மானின் சிவந்த வலத்திருக்கையில உடைய சக்கரமோ ஆயிரம் அரங்கனைக் கொண்டது.

"................செய்யகையில்
அரம் ஆ யிரம்கொண்ட
திண்திறல் ஆழி"

என்கின்றார்.

[அரம்-இங்கு கூர்மையான பாகங்களை உணரத்திற்று.]

திருமால் திருநாபியில் தாமரை பூத்திருப்பவன். திருக்கண்களும் தாமரை, திருவடிகளும் தாமரை.

அகலகில்லேன் என்று அலர் மேல் மங்கை உறைவதனால் மார்பும் தாமரை, இவ்விதம் தாமரைக் காடு சூழ்ந்த அவனைப் பெருநீர்நிலையாகக் கொள்ளலாம். அத்தாமரை மலர்க்கு அக புற இதழ்களைப் பாடும் பாசுரத்தில் "சிறக்கும் திகிரி" என்று அதன் சிறப்பைப் பேசுகிறார்.

பண்டொரு நாள் யானை ஒன்று அவன் திருவடித்தாமரைகளுக்குச் சூட்ட பொய்கையில் மலர் பறித்துக்கொண்டு இருந்தது. அதன் காலை முதலை ஒன்று கவ்விப் பிடித்துக் கொள்ள மரணத்தின் வலிய பிடியில் சிக்கிய யானை இறைவன் திருவடியை நினைத்து "ஆதிமூலமே" என்று அழைத்த வேளையில், இறைவன், திருமகளை, திருஅனந்தாழ்வானை, நித்ய சூரிகளையெல்லாம் மறந்தான். கருடனில் தாவி பொய்கை வருமுன் சக்கரத்தை ஏவி முதலைக்கு முடிவைக் கொடுத்தான்.

ஒரு சமயம் தன்னைக் கொல்ல சுதக்ஷிணன் அனுப்பிய பூதத்தினமேல் சக்கரத்தை ஏவிக் கொன்றான். இவ்வாறு திரு ஆழி செய்த திருவிளையாடல் ஒன்றா இரண்டா துஷ்ட நிக்கிரகம் செய்து சிறத்தலால் "சிறகும் திகிரி" என்பதாயிற்று.

அசுரர்களை அழிக்க அக்கினி போல சுவாலைகளை வீசுவதால் "அடுங்கனல் ஆழி" என்றும்,

"சூழிக்களிறுய்ய வெவ்வாய்
முதலைத் துணித்த உக்ரப்
பாழித் திகிரி"

பயங்கரமான வலிமையுள்ள சக்ராயுதம் என்றே பாடுகிறார்.

பகைவர்களுக்கு எமனாக சக்கரம் அமைவதால் 'நண்ணலர்மேல் விடுங்கால நேமி அங்கை' என்று அவன் கைகளில் உள்ள சக்கரத்தைக் கூறுகிறார். சதா காலமும் துஷ்ட நிக்ரக பரிபாலனம் செய்து கொண்டிருப்பதால் அவர்களின் கொழுப்பு அதில் படிந்து விடுகிறது, எனவே நிணக்கோல நேமி என்றும் குறிப்பிடுகிறார்.

மகாபாரதத்தின் பதினான்காம் நாள் போர். சுபத்ரனைக் கொல்ல அர்ச்சுனனுக்கு இனி

வாய்ப்பே இல்லை என்று துரி யோதனக் கூட்டம் துள்ளிக் குதித்தது. மாயன் மணிவண் ணன் சும்மா இருப்பானா?

"திரண்டுதித்த ஆயிரங்கோடி
திவாகரர் போல் ஒளிர் ஆழி"

யால் பகலை இரவாக்கி பேதித்து.

"விண்ணிற் பிறழ்ந்து செங்கேழ்
சோதித் திகிரி"

யாய் நின்ற சக்கரத்தை அதன் திவ்ய ஒளி பலகோடி . சூரியர் களுக்குச் சமமானது என்றும், சிவந்த நிறமுடைய கதிர்களைக் கொண்டது என்றும் புகழ்கிறார்.

நல்லவர்களைக் காத்து அல் லவர்களை அழிப்பது தானே அரங்கனின் திருவிளையாடல். இங்கு நல்லவனாகிய அருச்சுன னைக் காத்தற்கும் அல்லவனா கிய சுபத்ரதனை அழித்தற்கும் சக்கரம் பயன்பட்டது என்று அதன் சீர்மையைக் கூறுகிறார்.

நிலமகளின் துன்பம் நீக் கவே பாரதப்போர் நடத்தி னான். மாயம் பல செய் தான. தன் அளவில் ஆற்றலை, அர்ச்சுனனுக்கு உணர்த்தினான். எனவே சக்கர மாயோன் என் கின்றார்.

"எள்ளும் கரந்துறை எண்ணெயும்
போல் எண்ணில் கோடி அண்டத்து
உள்ளும் புறம்பும் ஒழியாது"

இப்பூவுலகில உள்ள எல்லா உயிர்களுக்கும் உயிராய், எள்ளி னுள் எண்ணெய் போல கரந்து அந்தர்யாமியாய் நிறைந்திருப் பவன் அவனே. அவனே முழு முதற்பொருள். மூலப் பரம் பொருள். படைத்துக் காத்து அழிப்பவன் அவனே. அவனுக்கு உற்ற துணையாய் இருப்பவை இத்திரு பஞ்சாயுதங் களே. அவற்றின் செயல் பற்றிக் குறிப்பிடும் பாசுரத்தில்

"......................முந்நீர்
அடைக்கும் பெரிய பெருமாள்
அரங்கர் அவர் கரத்துப்
படைக்கும் கமலம் அளிக்கும்மின்
ஆழிப் படைபடைக்கும்
துடைக்கும் கதைமுத்தி மாற்றுது
நல்கும் சுரிசங்கமே"

என்று இராவணனால் அபகரிக் கப்பட்ட ஜானகிப் பிராட்டியை மீட்பதற்காக கடலைத் திருவ ணைக் கட்டியருளிய நம்பெருமா னது திருக்கைகளில் தரிக்கின்ற தாமரை மலர் காக்கும் மின்ன லைப்போல் விளங்குகின்ற சக் கராயுதம் படைக்கும். கதாயு தம் அழிக்கும். உள்ளே சுழி யைக் கொண்ட வலம்புரிச்சங் கம் பரமபதத்தைகக் கைம்மாறு கருதாமல் கொடுக்கும். இங்கு சக்ரத்தை "மின் ஆழி" என்று போற்றுகிறார்.

உலகம் வட்ட வடிவினது. அதைச் சுற்றியுள்ள நீர்ப்பரப்

## சுப்ரபாதம்

சுப்ரபாதம் என்றால் பொதுவாக நல்லதைப் பிரார்த்தனை செய்வது. வைணவத்தில் சுப்ரபாதம் ஆதிநாளில் மூவரால் பாடப்பட்டது. (1) விசுவாமித்திரர் ஸ்ரீராமருக்குப் பாடியது (2) பெரியாழ்வார் கண்ணபிரானுக்காகப் பாடியது. (3) தொண்டரடிப்பொடியாழ்வார் திருவரங்கப் பெருமானுக்குப் பாடியது. இன்றுநாம் பக்தியுடன் பாடப்பட்டுவரும் ஸ்ரீவெங்கடேச சுப்ரபாதம மணவாள மாமுனிகள் வேண்டுகோளுக்கு இணங்க அவருடைய சீடர் பயங்கரம் அண்ணன் என்பவர் பாடியுள்ளார்.

## உடன் வரும் புண்ணியம்

நாம் நூறு வயது வரை இந்த உலகில் வாழ்ந்து பணத்தைச் சேர்த்தாலும், உயிர் இந்த உடலை விட்டுப் போகும் போது, ஒரு பைசா கூட எடுத்துப் போக முடியாது. பெண்களோ ஆண்களோ அணிந்து கொண்டிருக்கின்ற அணிமணிகள் தீ இவ்வுடலைத் தீண்டுவதற்கு முன்னரே கழற்றப்பட்டு விடுகின்றன. உயர்ந்ததாகப் பட்டுப்புடவை, வேட்டி முதலியனவும், வீட்டிலேயே அவிழ்க்கப்படுகின்றன. ஆகையால் நாம் சம்பாதிக்கும் பணத்தை வேறு சாமான்களாக மாற்றி விட்டால், உயிர் உடலை விட்டுப் போகும்போது, நம்முடன் கூட வேறு .கொண்டு போகலாம். வேறு சாமான்கள் என்றால் என்ன? பணத்தைச் செலவழித்துப் பலவகையான புண்ணியங்களை மூட்டைக் கட்டிவைத்துக் கொண்டால் அந்தப் புண்ணிய மூட்டைகளை நம்மூடன் கூடவே கொண்டு செல்லலாம்.

தொகுப்பு: ஸ்ரீ அழகியசிங்கர்

பும் வட்ட வடிவினதே. இரவு பகல் என மாறி மாறிச் சுழன்று வருவதால் காலமும் வட்டவடிவமே. இவையெல்லாம் முறகாலததில் திருப்பாறகடலை கடைந்தருளிய நீல மலையை ஒத்த அரங்கநாதரது செம்மை பொருந்திய வலத்திருக்கையில் தரித்த அழகிய சக்கரம் எடுத்த திருஉருவங்கள் ஆகும்.

"ஞாலத் திகிரி முதுநீர்த்
திகிரி நடாத்தும் இந்தக்
காலத் திகிரி முதலான
யாவும் கடல் கடைந்து
நீலத் திகிரி யனையார்
அரங்கர் நிறைந்தசெங்கைக்
கோலத் திகிரி தலைநா
ளினீற்கொண்ட கோலங்களே"

என்று காலச் சக்கரம் முதலிய எல்லாவற்றிற்கும் சககரத்தாழ் வானே முதற் காரணமென்று இப்பாசுரத்தில் உணர்த்தினார்.

இறைவன் எங்கும் நிறைந்த வன். ஆதலால் அவன் நிறம் எங்கும் நிறைந்துள்ள ஆகாயத் தின் நீலநிறம் எனக் குறிப் பிடுமுகத்தான் "மிக்க தானவரை சேதித்த நேமி" பெருங்கூட்டமான அசுரர்களை அழித்த சக்கரம் என்றும், அவ்வாறு அசுரர் களை அழித்திடுங்கால் மாயம் வல்ல அவர்கள் இருக்கின்ற இடம் வரையிலும் நீண்டு அழிப்பதால் "நீடும் திகிரி" என் கின்றுர்.

காககும் கடவுளான திருவ ரங்கநாதருக்கு இசசொல்மாலை பாடுவதற்கு, அத்திருவரங்கநாத னின் திருமேனி உறுப்புக்களை யும் ஐமபடைகளையுமே காப பாக வேணடிககொண்டார ஆசிரியர. இறுதிப்பாசுரமாகிய தற்சிறபபு பாயிரத்திலும

மனிதக்கவி மொழி யாமங்கை
வாழ்மனை வாள வள்ளல்
புனிதக் கவிகொண்டு மாலைசெய்
தான்புயல் போல்முழங்கும்
தொனிதக்க சங்கம் திருச்சக்
கரஞ்சுடர் வாளமுசலம்
குனிதக்க சாரங்கம் தரித்தார்
அரங்கர் பொற் கோயிலுக்கே.

என ஐம்படைகளைப் போறறு கின்றுர்.

நம்நாட்டில சைவ வைணவர கள வேறுபாடின்றி சக்கர வழி பாடு என்று ஒன்றை வழிப டுவதுண்டு. இது வடமொழி யில சுதர்சன வழிபாடு எனப் பெறும். சிற்சில இடங்க ளில் சக்கரத்தையே திருமாலாக வழிபடுவதுணடு. இனறும் காஞ்சீபுரம், திருமோகூர், கண் டியூர், திருவரஙகம், திருமய்யம் போன்ற இடஙகளில் சககரத் தாழவாருக்குத தனிச சநநிதி கள உண்டு. திருமாலின ஒர ஆயுதமாகவும், ஒரு வடிவ மாகவும் விளங்கும் சிறப்பினை யுடைய திருச்சககரம் அடியார் அழகிய மணவாளதாசரிடம எத்துணை அளவிற்கு ஆட் கொண்டிருந்தது என அறிந தோம். எனவே நாமும் நம் சிந்தையில் வைத்துப் போற்று வோம்.

"திருவாழி சங்கு திருவாழி
வாழி சிறந்த கொண்டல்
உருவாழி யோகத் திருந்துயில்
வாழி உலகளந்த
மருவார் மதுமலர்தாள்வாழி
வாழி வணங்கும் அன்பர்
பெருவாழ்வு அனைய பெருமாள்
அரங்கப் பெருஞ் செல்வமே.

ஆழ்வார திருவடிகளே சர ணம்.



## திவ்யப்பரந்தம் விளைந்த திருப்பதி எங்கே உள்ளது?

தமிழ்நாட்டில் கும்பகோணத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீசாரஙகப் பாணிப் பெருமாள், ஒரு காலத்தில் ஆழ்வார்களால் அருளிய நாலாயிர திவ்யப் ப்ரபந்தம் உலகில் வழககொழிநது மறைந் திட, 'ஆராவமுதே' என்கிற பத்து பாசுரஙகளை மாத்திரம் தன் பக்தர்கள் மூலமாக காப்பாற்றி வந்து நாதமுனிகள எனற மகானைக் கொண்டு மறுபடியும் பூவுலகில் பரவ வைத்து விளங்கின்படியால், இவ்வெம்பெருமானுக்கு 'ஆராவமுதாழ்வார' என்ற அழகிய திருப்பெயர் வழங்கலாயிற்று.

இப்பெருமாள் திவ்யபிரபநதத்தை இவவிதமாக காப்பாற்றி வைக்காவிடில் மற்ற திவ்ய தேசங்களையும் அவற்றின அருமை பெருமைகளை நாம் அறிய முடியாமல போயிருககும்.

தமிழ்மறையைக் காட்டித் தந்து ஸமப்ரதாயததைத தழைப் பித்த காரணத்தால இப்பெருமாளை 'திராவிட சுருதி தரசக:' என்று அர்ச்சனையில் ஒரு திருநாமம சொலலி இன்றைககும் ஏத்தி நிற்கிருர்கள்.

கும்பகோணத்தை 'திவ்யப்ரபந்தம விளைநத திருப்பதி' என றும் போறறப்படுகிறது.

திருமதி. இரா. தெய்வ வீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.

# பெரியாழ்வார் காட்டும் உவமைகள்

ஸ்ரீ அண்ணங்கராசாரியர் - காஞ்சிபுரம்.

## 1. அபிமான துங்கன் செல்வனைப்போல

திருப்பல்லாண்டில் எம்பெருமானுக்குப் பல்லாண்டுபாடத்தொடங்கிய பெரியாழ்வார் தாமொருவராகப் பல்லாண்டு பாடி த்ருப்பதி பெறுமல் முமுக்ஷுக்களையும கைவல்யார்த்திகளையும் ஐசவர்யார்த்திகளையும் அழைக்க, அவர்கள் வந்து சேர அவர்களோடுங்கூடி மங்களாசாஸனம் செய்தருளுகிறுரென்றுள்ளது. முடிவில் ஐசவரயார்த்தியின் மங்களாசாஸனப் பாசுரம் அல்வழுக்கொன றுமில்லாவென்பது. இதில் செலவநம்பியென்கிற மஹான் உபமானமாகக கூறப்படுகிறுர. விஷ்ணுசித்தரைப் பெரியாழ்வாரக ஆக்கினவர் அந்த மஹானென்பது சரித்ர ஸித்தம். அவர திருக்கோட்டியூரில் திருவவதரித்தவராதலால் 'அணிகோட்டியர் கோன்' எனப்பட்டார். மேல் பெரியாழ்வார் திருமொழியில் (4-4) நவகாரியமென்கிற திருக்கோட்டியூர்ப் பதிகத்தில (8) 'நளிர்ந்தசீலன் நயாசலன அபிமானதுங்கனை நாடொறும் தெளிந்த செலவனைச சேவகங் கொண்ட செங்கண்மால திருககோட்டியூர்' என்றருளிச்செய்ததுங் காணக. 'உபாமாநமசேஷாணும் ஸாதூ நாம யஸ் ஸதாபவத்' என்கிற ஸ்ரீவிஷ்ணுபுராண வசனத்தின்படி ப்ரஹ்லாதாழ்வான ஸாதுக்களுககெலலாம் உபமான பூமியாயிருந்தது போல, செலவநம்பியும ஸ்ரீவைஷ்ணவோத்தமரககளுககெலலாம உபமான பூமியாயிருந்தாரென்பது அறியலாகிறது. நெடுங்காலம் க்ஷுத்ர பலார்த்தியாயிருநது இனறுக வநது பணிந்த (ஐச்வர்யாரததியான) இவ்வதிகாரி திருத்து யாயபோலே இயற்கையான பகதிபரிமளம பூண்ட செலவ நம்பியைத தனக்கு உவமை கூறுதல் பொருந்துமோ? எனின் பெருவிலையனான ரத்னம் நெடுநாள சேறறிலே யழுந்திக்கிடநது ஒளிமழுங்கியிருந்து ஒருநாள் சேறுகழுவின வாறே இயறகையான வொளியைப பெறறு அநரக்க ரத்னங்களோடொக்க எணணப் பெறுவது காணு நின்றேமனறே. ஆசார்ய ஹ்ருதயத்தில் "ஒன்று கூடினதாய்ப் பறறுக்க மீண டொழிகையாலே பழவடியேனெனனுமதொன்றுமே ஒழிகக வொழியாதது" எனற சூரணை வியாக்கியானத்துடன இங்கு சேவிக்கத்தக்கது.

## 2. சீதக்கடலுள்ளமுதன்ன தேவகி

பெரியாழ்வார திருமொழி 1.2.1 'சீதககடலுளளமுதனன தேவகி' எனபதில் க்ருஷ்ணசிசுவை யசோதைப் பிராட்டி பககலிலே அனுப்பிவைத்த தேவகிப பிராட்டி "சீதக்கடல உளளமுதனன தேவகி" எனப்பட்டாள. இப்பதிகத்திலேயே மேலே 'திருவின வடிவொக்கும தேவகி பெறற' என்னுமிடததுத தேவகியை ஸ்ரீ மஹா லக்ஷ்மியோடு ஒத்தவளாகச சொலலியிருபப தற்கேற்ப இங்கும் தேவகிக்கு லக்ஷ்மியோடு ஸாம்யமே சொலலப்படுகிறது. சீதக்கடலின உளளமுது - ஸ்ரீமஹாலக்ஷ்மி; அவளையொத்தவள் தேவகி - எனறதாயிற்று. தேவர்களுக்காகக கடல் கடைந்த காலத்திலே இரண்டு அமுதம் தோன்றியது; ஒன்று புறவமுது; மற்றென்று உள்ளமுது. புறவமுதை அமரர்கள் கொண்டனர்; உள்ளமுதை வங்கக்கடல் கடைந்த மாதவன் கொண்டனன். 'விண்ணவரமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே' எனறூர் திருமங்கையாழ்வார். 'மநதரம் நாட்டியன்று மதுரககொழுஞ்சாறு கொண்ட சுந்தரத் தோளுடையான்' எனற நாசசியார பாசுரத்தில் 'மதுரக்கொழுஞ்சாறு' என்பதறகு ஸ்ரீமஹாலக்ஷ்மியென்று பொருள கொண்டார கூரத்தாழ்வான். ஸுந்தர பாஹு ஸ்தவததில "உததிகமந்தராத்ரி மதிமந்தந லபதபயோ மதுரரஸேந்தி ராஹ்வஸுத ஸுந்தரதோ பரிகம்' என்றவிடத்து அடியேனுடைய வியாக்கியானம் காண்க. ஆக, 'சீதக்கடல் உள்ளமுது' எனறது ஸ்ரீமஹாலக்ஷ்மியையாய அவளைப் போன்ற பாக்யவதி தேவகி என்றதாயிற்று எமபெருமானை வல்லபனாகக் கொள்ளப்பெற்ற பாக்யவதி அவள் அவனை மகனாகக் கொளளப் பெற்ற பாக்யவதி இவள. பிராட்டியைப் போலே பரோபகாரமே சீலமான தேவகியென்றவாறு.

## 3. முத்தும் மணியும்...... தலைப்பெய்தாற்போல்

பெரியாழ்வார் திருமொழி 1-2-2 முத்தும் மணியுமென்கிற பாட்டில் ஸ்ரீ கிருஷ்ண சிசுவின் பாதங்களிலுள்ள பத்து விரல்களும் யசோதைப் பிராட்டியினால் வருணிக்கப்படுகின்றன. நவரத்தனங்களையும் மாறி மாறிப் பதித்தாற்போலே விளங்குவனவாம் திருவிரல்கள். பாட்டில் சில ரத்னங்களைச் சொன்னது நவரத்னங்களுக்கும் உபலக்ஷணம்,. கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன நவரத்தினங்களாம். கால்களுக்கு இடுகின்ற செம்பஞ்சு மருதாணியென்பன போல ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதங்களில் ஒன்பது விரல்களும் நவரத்ன வர்ணத்தையும் மற்றொரு விரலுக்குப் பொன்னிறத்தையும் யசோதை இட்டு என் மணிவண்ணனுடைய பாதங்களில் பத்துவிரலும் நவரத்னங்களையும் நல்ல பொன்னையும் ஒளி விளங்க மாறிமாறிப் பதித்து வைத்தாற்போலிருப்பதை வந்து பாருங்கள்" என்று தோழிமார்களை விளித்துக் காட்டினாளாயிற்று.

## 4. வாரணம் பைய நின்றூர்வது போல்

பெரியாழ்வார் திருமொழி 1-7-1. "தொடர் சங்கிலிகை சலார பிலாரென்னத் தூங்கு பொன்மணியொலிப்ப படுமும்மதப் புனல் சோரவாரணம் பைய நினறு ஊர்வதுபோல், உடன் கூடிக் கிண்கிணி ஆரவாரிப்ப உடைமணி பறைகறங்கத, தடநதாளிணை கொண்டு சார்ங்கபாணி தளரநடை நடவானோ." கணணபிரான் தளற் நடை நடககும்போது காலிலணிந்துள்ள பாதசசதங்கை கிணகிணென்று சப்திக்கவும் இடையிற்கட்டிய சிறுமணிகள் பறையொலிக்கவும் நடக்கின்ற ஆயாஸத்தினால் உடலில் வேர்வை நீர் பெருகவும் நேருமாதலால் இதற்கு ஏற்றதோர் உபமானம் கூறப்படுகின்றது. யானை யானது மதத்தின் மிகுதியினால் கட்டுத்தறியை முறித்து விட்டுக் காலிலிட்ட இரும்புச் சங்கிலியை இழுத்துக்கொண்டு நடக்க, அந்தச் சங்கிலித்தொடர் சலார் பிலாரென்று ஒலிக்கவும், பொன் கயிற்றினால் கட்டித் தனது இரு புறத்திலும் தொங்கிவிட்ட மணிகள் தொனிக்கவும் மதநீர் பெருகவும் பெற்று மெல்ல நடக்கும் யானை ஏற்ற உவமையாயிற்று.

## 5. வெள்ளிப்பெருமலைக் குட்டன் கருமலைக்குட்டன்

பெரியாழ்வார் திருமொழி 1-7-5. 'முன்னலோர் வெள்ளிப் பெருமலைக்குட்டன் மொடுமொடு விரைந்தோடப் பின்னைத் தொடர்ந்ததோர் கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல், பன்னியுலகம் பரவியோவாப் புகழ்ப் பலதேவனென்னும், தன்னம்பியோடப் பின் கூடச் செல்வான் தளர் நடை நடவானோ' நந்தகோபர் திருமாளிகையில் நம்பிமூத்தபிரான் (பலராமன்) முன்னேயோட. கண்ணபிரான் அவன் பின்னேயோடுகிற படிக்கு ஏற்ற உவமை கூறப்படுகின்றது. பலராமன் வெண்ணிறமுள்ளவனாதலால் அவன் ஓடுவது வெள்ளி மலையீன்ற குட்டியோடுவதாகவும், அவன் பின்னே கண்ணனென்னுங் கருந்தெய்வம் ஓடுவது கருமலையின்ற குட்டி தொடர்ந்தோடுவதாகவும் வைத்துக் கூறப்பட்டது. (மொடுமொடு விரைந்தோட - நடக்கும்போது தோன்றிய விரைவின் குறிப்பு: ஒலியின் குறிப்புமாம்.)

## 6. செங்கமலப்பூவில் தேனுண்ணும் வண்டேபோல

பெரியாழ்வார் திருமொழி 1.8. "பொன்னியல் கிண்கிணிப் பதிகத்தில் ஸ்ரீக்ருஷ்ண சிசு பருவத்திற்குத் தகுதியாக ஓடிவந்து தன்னையணைத்துக் கொள்ள வேணுமென்று யசோதைப் பிராட்டி வேண்டிக் கொள்ளுமாறு சொல்லுகிறது. அதில் இரண்டாம் பாட்டில் - கண்ணனுடைய கூந்தல் முகத்திலே அலையும்படிக்கு ஏற்ற உவமை கூறப்படுகின்றது. ('செங்கமலப் பூவில் தேனுண்ணும் வண்டேபோல், பங்கிகள் வந்துன்பவளவாய் மொய்ப்ப') செந்தாமரைப்பூவில் தேனைக் குடிப்பதற்காக மொய்க்கின்ற வண்டுகளைப் போல் கண்ணனது கரிய கூந்தல் வந்து பவளம் போற் செந்நிறமான வாயில் மொய்த்துக் கொள்ளுகின்றனவாம். நாச்சியார் திருமொழியில் (14.8) 'களிவண்டெங்கும் கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிர நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே' என்ற பாசுரம் இப்பாசுரத்தை ஒரு புடை யொத்திருக்கும் குழல்களுக்கு வண்டுகளையொப்பிடுவதற்கு மட்டும்.

நன்றி: ஸ்ரீராமானுஜன்-377





# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின் தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 120/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர் | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 120/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர் | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | ஒருவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 620/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | ரூ. 620/- |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 420/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |
| | **வாராந்திர சேவைகள்** | | | | |
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கத்தூரிக்கிண்ணம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன்-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |
| | **வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்** | | | | |
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லக்கு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் (உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி) | பதின்மர் | காலை 11-00 | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589



# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## திருமலையில் ஆர்ஜித சேவைகள்

| வ. எண் | சேவை/உத்ஸவங்களின் பெயர்கள் | அனுமதிக்கப் படும் ஆட்களின் எண்ணிக்கை | காலம் | நாள் | ஒவ்வொரு சீட்டின் தொகை |
|---|---|---|---|---|---|
| 1. | சுப்ரபாதம் | ஒருவர் | காலை 3-00 | தினமும் | ரூ. 120/- |
| 2. | தோமாலை சேவை | ஒருவர் | காலை 3-45 to 4-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 3. | அர்ச்சனை | ஒருவர் | காலை 4-30 to 5-30 வரை | தினமும் | ரூ. 220/- |
| 4. | ஏகாந்தசேவை | ஒருவர் | மாலை 10-30க்கு மேல் | தினமும் | ரூ. 120/- |
| 5. | கல்யாணோத்ஸவம் | ஐவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 2500/- |
| 6. | சிறப்பு கல்யாணோத்ஸவம் | இருவர் | காலை 10-30 | தினமும் | ரூ. 750/- |
| 7. | ஆர்ஜித பிரம்மோத்ஸவம் | ஐவர் | மாலை 1-00 | தினமும் | ரூ. 500/- |
| 8. | தோலோத்ஸவம் | அறுவர் | மாலை 1-30 | தினமும் | ரூ. 750/- |
| 9. | அர்ச்சனானந்தர தரிசனம் | ஒருவர் | காலை 5-00 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 100/- |
| 10. | ஆமந்த்ரணோத்ஸவம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளிக் கிழமைகள் தவிர | ரூ. 620/- |
| | | வெள்ளிக் கிழமைகளில் ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமை மட்டும் | ரூ. 620/- |
| 11. | தோமாலை மற்றும் அர்ச்சனை | ஒருவர் | காலை 6-30 மணி | வெள்ளிக் கிழமைகள் மட்டும் | ரூ. 420/- |
| 12. | சஹஸ்ர தீபஅலங்காரசேவை | ஐவர் | மாலை 5-30 மணிக்கு பிறகு | தினமும் | ரூ. 500/- |
| | **வாராந்திர சேவைகள்** | | | | |
| 1. | விசேஷ பூஜை | ஐவர் | காலை 6-00 | திங்கள் | ரூ. 3000/- |
| 2. | அஷ்டதளபாத பத்மாராதனம் | ஐவர் | காலை 5-30 | செவ்வாய் | ரூ. 3500/- |
| 3. | சஹஸ்ரகலசாபிஷேகம் | அறுவர் | காலை 5-30 | புதன் | ரூ. 5000/- |
| 4. | திருப்பாவாடைசேவை | அறுவர் | காலை 5-30 | வியாழன் | ரூ. 5000/- |
| 5. | பூராபிஷேகம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 750/- |
| 6. | புனுகுப் பாத்திரம் | ஒருவர் | மாலை 3-30 | வெள்ளி | ரூ. 300/- |
| 7. | கத்தூரிக்கிண்ணம் | ஒருவர் | காலை 3-30 | வெள்ளி | ரூ. 150/- |
| 8. | நிஜபாத தரிசனம் | ஒருவர் | காலை 5-30 | வெள்ளி | ரூ. 100/- |
| 9. | ஆடைஅலங்கார சேவை | இருவர் (கணவன்-மனைவி) | காலை 3-30 | வெள்ளி | ரூ.12,250/- |
| | **வருடாந்திர சேவைகள்/உத்ஸவங்கள்** | | | | |
| 1. | பவித்ரோத்ஸவம் | ஐவர் | காலை 8-00 | ஆகஸ்ட் | ரூ. 7500/- |
| 2. | வஸந்தோத்ஸவம் | பதின்மர் | மாலை 2-00 | ஜனவரி | ரூ. 3000/- |
| 3. | புஷ்பயாகம் | ஐவர் | காலை 6-00 | நவம்பர் | ரூ. 3500/- |
| 4. | அபித்யேக அபிஷேகம் | ஐவர் | காலை 8-00 | ஜூன் | ரூ. 2000/- |
| 5. | பத்மாவதி பரிணயம் | ஐவர் | மாலை 3-00 | மே | ரூ. 5000/- |
| 6. | புஷ்ப பல்லக்கு | ஐவர் | மாலை 5-30 | ஜூலை | ரூ. 1000/- |
| 7. | கோயில் ஆழ்வார் திருமஞ்சனம் (உகாதிக்கு முன்னாள், ஆனிவார ஆஸ்தானம், சுவாமி பிரம்மோத்ஸவம் மற்றும் வைகுண்ட ஏகாதசி) | பதின்மர் | காலை 11-00 | வருடத்திற்கு நான்குமுறை | ரூ. 3000/- |
| 8. | தெப்போத்ஸவம் | ஐவர் | மாலை 6-00 | வருடத்திற்கு 5 நாட்கள் | ரூ. 2500/- (ஒருநாள்) |

மேலும் தகவல்களுக்கு அணுகவும்: 79277, 77777 Ext.3679 மற்றும் 3589

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பதினேழாம் அத்தியாயம்

## சிரத்தாத்ரய விபாக யோகம்

(உமைப்ரியன்)

### பகவான் சொன்னது

ஓம் தத் ஸதிதி நிர்தேசோ
ப்ரஹ்மணஸத்ரிவித ஸ்ம்ருத: ।
ப்ராஹ்மணாஸ்தேன வேதாஸ்ச
யக்ஞாஸ்ச விஹிதா: புரா ॥ (23)

"பிரம்மமானது ஓம், தத, ஸத என்று மூன்றுவிதமாகக கூறப பட்டுளளது. இந்த பிரம்மத்தி லிருநதே அந்தணர்கள், வேதங கள், வேள்விகள் தோனறின."

[இந்த உலகமே ஓசையின மொத்த உருவமாக உளளது. அந்த ஓசையிலிருந்து தான எல்லா உயிர்களும உருவாகின றன. இந்த ஓம் அகர, உகர, மகர சேர்க்கையாகும். இநத 'நம' என்பதே அந்தப் பரம்பொருளாகும. பிரணவததின் எதிரொலியே 'ஓம்' ஆகும். இந்த ஓசை ஓயாது ஒரே மாதிரியாக இந்த அண்டத்தில் ஒலித்துக் கொணடிருக்கிறது.

அடுத்துவரும 'தத' என்பதறகு அது எனறும பொருளுடையது. ஞானிகள் அந்த நாத பிரம மததை பிரம்மம் என்று குறிப் பிடாமல் 'அது' என்றே குறிப் பிடுகின்றனர். வேதஙகளும் அந்த பரமபொருளை பெயரிடடுக் குறிககாமல், 'அது' என்று தான் பல இடங்களில் அழைக் கின்றன. 'ஸத்' என்ருல உண் மைப்பொருள். அந்த உண்மை காலததால, இடததால் மாறு படாதது. இறைவன் அநத உண்மையாக விளங்குகின்ருன. ஆகவே ஓம், தத, சத் எனருல ஓசை வடிவாக உளள அநதப பொருள (அந்த பிரம்மம்) மெயப பொருளாகும எனபதாகும.

இநத பிரமமததிலிருந்து எலலா உயிர்களும தோனறி னாலும முககியமாக அநதணர, வேதங்கள, வேளவிகள் என்று குறிப்பிடடு அவை அநத பிரம மத்திலிருநது தோனறியதாக இச்செய்யுளில பகவான கூறியுள்ளார. இஙகு இறைவன் வரணுசரம பேதத்தைப பகர விலலை. வரணுசர தரமத்தையே அறிவுறுததியுளளார். ப்ரம் பொருளின் இயலபை, வாழ வின இலக்கணத்தைக் கூறுவன வேதங்கள். அந்த வேதஙகளை நனருக செவிவழிச் செய்தியா கப் பயின்று, உண்மைப்பொருளை அறிந்து உலக தர மததைக காக்க தஙகளை மூன றுதாரணமாக்கி மானிட இனம மாணபுறு வேதத்தைக் காப பாற்றுவார யாரோ அவர்களே அநதணரகள. ஆகவே இநத அந்தணரகளின் வாழ்க்கை முக யமானதாகக கருதப்படுவதால அவர்களை அந்த பிரம்மத்திலிருந்து தோன்றியதாகக் கூறப படுகினறனர். வாழ்ககை நல முடன் சமய சிநதனையுடன- மனிதாபிமான சிநதனையுடன் விளங்கிட மேற்கொளளும நற செய்கைகளே வேள்விகள எனப தாகும்.]

தஸ்மாதோ மித்யுதாஹ்ருத்ய
யக்ஞதானதப: க்ரியா: ।
ப்ரவர்தந்தே விதாநோக்தா:
ஸததம் ப்ரஹ்மவாதினாம் ॥ (24)

"ஆகையால் 'ஓம்' என்று கூறியபிறகே, சாத்திரஙகள் கூறிடும் வேளவி, தானம, தவம் ஆகியன சாததிரஙகள அறிவுறுத தும் வகையில் வேதம் அறிந் தவர்களால் மேற்கொள்ளப்படுகின்றன."



[இறைவன் 'ஓம' எனும் ஓசை வடிவானவன். அவன இந்த அண்டத்தில் ஒவ்வொரு அணு விலும் நீக்கமற நிறைந்துள ளான். அதாவது இயற்கையின் மறு உருவமாக அவ் இறை வன் இருக்கின்றான். ஆகவே அவன் வழிபடும் முகத்தான் 'ஓம்' என்று கூறுதல் வேண் டும். மனிதன் நாளும் ஒவ் வொருகணமும் செயல்புரிந்து கொண்டிருக்கவேண்டும். அவ வாறு செயலாற்றும் போது அச்செயல் மேற்கொள்வதில் பல குறைபாடுகளை மனி தன் தெரிந்தோ தெரியாமலோ புரிகின்றான். அக்குறைபாடு கள் அவனுக்குத் தெரிந்தாலும், அவனால் செயல்களை நிறுத் தமுடிவதிலலை. செயலாற்று மல் இருக்கவும் முடிவதில்லை. தான் புரிந்திடும் செயல்கு றைபாடுகளை மன்னித்திடுமாறு எங்கும் எதிலும் உள்ள இறை வன் 'ஓம்' என்ற பிரணவச் சொல்லால் விளித்து, (உச்ச ரித்து) செயல்களை மேற்கொள் கின்றான். ஆகவேதான் மந்தி ரங்களைச் சொல்லி வேள்வி, தானம் போன்ற சமயச் செயல களை மேற்கொள்ளும் முனனர் வேதம் அறிந்த சான்றோர்கள்; சாததிரம் அறிந்த அறிஞரகள 'ஓம்' என்று கூறுகிறார்கள்.]

ததித்யனபிஸந்தாய பலம்
யக்ஞதப: க்ரியா: ।
தானக்ரியாஸ்ச விவிதா: க்ரியந்தே
மோக்ஷகாங்க்ஷி: ॥ (25)

"'தத்' என்று சொல்லைக்கூறிய பிறகு, மோட்சமெனும் உயரிய குறிக்கோளை இகத்திலிருந்து அடையவிரும்புவர்களால பலவி தமான வேள்வி, தவம மற்றும் தானம் என்ற செயலகள மேற கொள்ளப்படுகின்றன."

['தத' என்றால் முன்னர கூறி யவாறு நமமிலிருந்து இயற கைப் பிறபபிலிருந்து வேறு பட்டு விளஙகிடும இறைவ னான 'அது' எனறு பொரு ளாகும். 'தத' என்று அழைக கபபெறும் இறைவன எலலா ஜீவாத்மாக்களுககும் தலைவன. நாம் அவன் அடிமை ஆகும. ஆகவே அடிமை மேறகொளளும எல்லா செயல்களும அவனால ஆணையிடபபடடே நடைபெறு கினறன எனற உண்மையை அறிதல் வேண்டும. பொத் தானை அழுத்தியவுடன் மினவி சிறி சுழல்கிறது; வானொலிப பெட்டி ஒலிக்கிறது; தொலைக காட்சியில படம தெரிகிறது. இவற்றிற்கான 'சக்தி' நம் கையி லிருந்து வருவதிலலை. மின சாரம எனும கணணுககுததெரி யாத 'சக்தி' இவற்றை இயக்கு கின்றன. அதுபோனறே ஊனக கண்களுககுத் தெரியாத அந்த இறைவன் நம்மை செயல் புரியவைக்கின்றான். நாம வெறும் கருவி மாத்ரமே உலகா யுத வாழ்க்கையை மேற் கொள்கொணடிருக்கும் மக்கள், விடுபேறுஎனும் மோட்ச உல கத்தை அடைய விரும்பும் போது, வேள்வி, தானம், தவம போனற செயல்களை மேற் கொள்ளும்போது பயனை எதிர பாராது செயல்புரிவர். 'அவன் ஆட்டுவிக்கின்றான், நாம் ஆடு கின்றோம்'.]

ஸத்பாவே ஸாதுபாவே ச
ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே ।
ப்ரசஸ்தே கர்மணி ததா ஸச்சப்த:
பார்த்த யுஜ்யதே ॥ (26)

"அரச்சுனா! 'ஸத' எனற சொலலுக்கு உணமை என் றும, நன்மை என்றும பொருள உண்டு. மங்களகரமான செயல் களின்போதும் 'ஸத்' எனற சொல் பயன்படுத்தப்படுகிறது."

['சத' என்றால் எநத நிலையி லும, எந்தக காலததிலும் அழி யாத குறைபடாத ஒன்று என பதாகும். அந்த ஒன்றே இறை வன். ஆனால் குறைவுடைய எண்ணங்களைக கொண்ட, அழி யும் உடலைக கொண்ட மனி தன் 'சத்'திற்கு எதிரான 'அசத்' ஆவான. இந்த 'அசத்' ஆன மனிதனையும் 'சத்'தாக எணண வேண்டும் என்பது இறைவ னது கருணை வெளிப்பாடா கும். இறைவனால் படைக்கப் பட்ட மனிதன் தீயோனல் லன். அவனுள்ளத்தில் இறை வன் இருக்கின்றான். கோயில் அசுத்தமாக இருந்தாலும், கரு வரையில் இறைவன் இருப்ப தால அக்கோயில் புனிதமா கிறது. தீயோனை நல் லோன என்று இச்சமுதாயம் பலமுறை கூறி அழைத்திடும போது தீயோன் நல்லோ னாக மாறலாம். அத்தகு புனிதமிகு 'சத்' எனறு சொல் மங்களகரமாகவே எண்ணப்படு கிறது. மாயை நிறைந்த வாழ்க்கையை, ஏமாற்றமும், வஞ் சமும் கொண்ட வாழ்வை 'உண்மை' (சத்) என்று நினைத் திடும்போதுதான் அவ்வாழ்க் கையில் மனிதனுக்குப் பற்று மிகும். தன் வாழ்க்கையில ஒரு பொருள்-இலக்கு இருபப தாக அவன் ஒருநாளன்றி ஒரு நாளாவது நினைத்திடுவான். அந்த நினைப்புதான் அவன வாழ்க்கையை இனிதாக்குகின் றது. அந்த் இனிமையில் தான் அவன் வாழ்க்கை உண மையை உணரவோ சமுதாய சிந்தனையை வளர்த்துக்கொள் ளவோ முடியும். ஆகவே 'அசத்' தான மனிதன், அசத்தான உல கம் 'சத்'தாகக் காணப்படுகி றது.]

யக்ஞே பதஸி தானே ச ஸ்திதி:
ஸதிதி சோச்யதே ।
கர்ம சைவ ததர்த்தீயம்
ஸதித்யேவாபிதீயதே ॥ (27)

"வேள்வி, தவம், தானம் ஆகியவற்றில் ஊடுருவி இருப்பது 'ஸத்' என்பதாகும. மேலும் மெய்ப்பொருளான பிரம்மததிற்காக மேற்கொள்ளப்படும் எந்த செயல்களும் 'ஸத்' எனறே கூறப்படுகிறது."

['சத்' எனபது புனிதமான சொல மட்டுமல்ல, புனிததகை ஏற்படுத்தும் சொல்லும்கூட. இறைவன 'சத' ஆவான். அவனை அடைய வழிவகுககும் வேள்வி, தவம், தானம் ஆகியனகூட சததாகவே அழைக்கப்படுகின்றன. ஏனெனில புனிதமான ஒரு இலக்கினை மனிதன் அடைய உதவுவதால். இறைவனை வணங்கிட பலவகையான சமயச் சடங்குகள உள்ளன. அவற்றில் ஒனறுன உயிர்ப்பலியினை பலர் புரிநது வருகின்றனர். நோக்கமோ புனிதமானது. ஆனால் போக்கோ கொடுமையானது. ஆனால், உயிர்ப்பலியினை இந்துக் கடவுள் என்றுமே வரவேற்றதில்லை, கேட்டதிலலை என்று கூறும் அறிவுரைகளே அத்தகையோரின் எண்ணங்களை மாற்றிடும். மாறிடும்போது அவன செய்திட்ட வினைகள் சத்தாக மாறிவிடுகின்றன. ஆகவே இறைவனை அறிய மேற்கொள்ளும் வழிமுறைகள் தவருக இருந்து திருந்திடும்போது, அத்தவறுகளே 'சத்' செயல்களாக அமைந்துவிடுகின்றன.]

அச்ரத்தயா ஹுதம் தத்தம்
தபஸ் தப்தம் க்ருதம் ச யத் ।
அஸதித்யுச்யதே பார்த்த ந ச
தத்ப்ரேத்ய நோ இஹ ॥ (28)

"ஈடுபாடின்றிச் செய்யப்படும் வேளவி, தவம், தானம் செயல்கள் ஆகியன 'அஸத்' என்று அழைக்கப்பெறும். அர்ச்சுனா! அத்தகு செயல்கள் இம்மைக்கோ, மறுமைக்கோ பயன் படா."

[ஓர் அலுவலகத்தில் பணிபுரியும் ஒருவர் எவ்விதமான பணி ஈடுபாடின்றிச் செயல்படும்போது அவர் ஒரு 'செக்கு மாடாகவே' தன் உழைப்பினை அளிக்கின்ருர். அதனால் பணியில் பிடிப்பின்றித் தன் மேன்மையில் நாட்டமின்றி விளங்கிடும்போது, அவருக்கோ, அவரைச் சார்ந்த குடும்பத்திற்கோ, சிந்தனை இன்றி நல்கிடும் உழைப்பினால் அவர் பணிபுரியும் நிறுவனத்திற்கோ எந்தவிதமான ஆக்கப்பூர்வமான பயனும் இல்லை. மற்ற கரமங்களான படித்தல, வியாபாரம் செய்தல், உடலைப் பேணுதல் போன்றவற்றை மேற்கொள்ளும் போது ஆர்வமின்றி விளங்கினால் அதனால் அவர்கள தோல்வியைத் தான் தழுவ முடியும். அதேபோன்று அவ் இறைவனை அடைய தவம், தானம், வேள்வி போன்றவற்றை மேற்கொள்ளும்போது, எவ்விதமான ஈடுபான்றி, ஆர்வமின்றி சமயச்சடங்குகளை புரிந்திடும் போது அவர்கள் 'ப்ரபோதம்' எனும் ஆன்ம உயர்வினை உயர்த்திடும்பயனை அடைவதில்லை. ஆகவே, இறை சம்பந்தமான நற்காரியங்களை செய்திடும்முன்னர், 'ஓம் தத் சத்' என்று கூறிடும்போது, அவர்கள்தம் காரியங்கள குறைபாடுகள் நீங்கி, புனிதத்தன்மையோடு விளங்கிடும்.]

பதினேழாம் அத்தியாயம் முற்றும்.

(தொடரும்)

## பாம்பினால் கருடனுக்கு ஏற்பட்ட துன்பம்

காசிபமுனிவர் தம் மனைவியர் பதின்மூவருள் 'கத்துருவை' என்பவள் பல பாம்புகளைப் பெற்ருள். மற்ருெரு மனைவி 'வினதை' என்பவள் ஒரு பந்தயததில் தோற்றுப்போனதின் விளைவாக கத்துருவிறகு அடிமையானாள. அதன்பின்பு வினதை கருடனைப் பெற்ருள். கருடன் தன் தாயோடு கத்துருவைக்கும் அவள் பெற்ற பாம்புகளுக்கும் அடிமைத்தொழில் செய்து வருந்தினாள். அக்காலத்தில் பாம்புகளால் கருடன் அடைந்த துன்பங்கள் பல. பின்பு கருடன் இந்திரனிடத்தில் இருந்த அமுதக் குடத்தை தனது வலிமையால் கொணர்ந்து கொடுத்துத் தானும், தன் தாயும் அடிமைத்தனததிலிருந்து நீங்கும் நிலைமையை அடைந்தான். பின் கருடன் பாம்புகளிடத்தில் தீராப்பகை கொண்டு அவைகளை துன்புறுத்தத் தொடங்கினான். அதனால் அஞ்சிய பாம்புகள் சிவபெருமானை வழிபட அவைகளின் மீது இரக்கம் கொண்டு அவைகளை எடுத்து தன் மேல் அணிகலன்களாக அணிந்து கொண்டான்.

திருமதி. இரா. தெய்வ வீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.

# வைணவத்தில் ஆசாரியரின் மேன்மை

ஸ்ரீமான். தி.அ. ஸ்ரீநிவாஸன் - காஞ்சிபுரம்.

ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தில் ஆசாரியருக்கு மிகவும் உயர்ந்த மேன்மை அளிக்கப்பட்டுள்ளது. ஆசாரியன் சேதனனை ஈச்வரனிடம் சேர்த்து வைப்பதால் இறைவனைக்காட்டிலும் மேம்பாடு உடையவன். பகவானுடைய கட்டளையை பகவதாஜ்ஞா என்று வழங்கப்படும். ஆசாரியன் கட்டளையை திவ்யாஜ்ஞா என்று சிறப்பித்து வழங்கப்படும். 'ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்' என்பதிலிருந்து இதனை அறியலாம். 'குருரேவ பரம்பரஹ்ம' (குருவே பரப்ரஹ்மம்) என்பதனை மதுரகவி ஆழ்வார் வைபவத்தில் காணலாம். மற்ற ஆழ்வார்களைப் போல் எந்த எம்பெருமானையும் இவர் பாடவில்லை. "தேவுமற்று அறியேன்" என்று ஆசாரியனான நம்மாழ்வாரைத் தவிர வேறு தெய்வம் அறியேன் என்று பாசுரம் அருளிச்செய்கிறார். 'அன்னையாய் அத்தனாய்' என்றும் எல்லாம் இவருக்கு நம்மாழ்வார தான். இவ்வாறு 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற ப்ரபந்தத்தில் சிஷ்யன் நிலைய நன்கு விளக்கியுள்ளார். இப்பாசுரங்களில் 'அடியேன்' என்ற சொல்லே அறிமுகப்படுத்தி ஸ்ரீவைஷ்ணவன் தன்னை எப்படி கொள்ள வேணும் என்று வழிவகுத்துள்ளார். அன்று தொடங்கி வைணவ ஆசாரியர்கள் தங்கள் செயல்களால் ஆசாரிய பக்தியை வெளிப்படுத்தின சில சம்பவங்களை அநுபவிப்பது மிக்க ஆச்சரயமாய் இருக்கும்.

மணக்கால்நம்பி என்பவருக்கு உய்யக்கொண்டார ஆசாரியன. உய்யக்கொண்டாரின் தேவிகள பரமபதித்த பிறகு, ஆசாரியனுடைய திருமாளிகையில் சகல கைங்கரயங்களும் மணக்கால நம்பியே கவனித்து வந்தார. ஒருநாள் தம் ஆசாரியரின் சிறு பெண்குழந்தைகள் இருவரையும் குளத்தில் நீராட்டித் திருமாளிகைக்கு அழைத்துவரும் போது வழியில் சிறு வாய்க்காலை கடப்பதற்கு முடியாமல் குழந்தைகள் தயங்க மணக்கால் நம்பி உடனே அந்த கால்வாய் சேற்றில் படுத்து, தம முதுகின் வழியாய் குழந்தைகள் அடியெடுத்து தாண்டும்படிச் செய்து திருமாளிகையைச் சேர்ந்தார். இதைய றிந்து உய்யக்கொண்டார் நம்பிகளின் ஆசாரிய அபிமானத்தைக் கொண்டாடி அவரை வெகுவாக அநுக்ரஹித்தார.

ஆளவந்தார் என்றவருக்கு முதுகில ராஜபிளவை என்ற நோய் கண்டிருந்தது. ஒரு நாள காலக்ஷேப கோஷ்டியில தம் எண்ணற்ற சிஷயர்களை நோக்கி 'இந்நோயை ஏற்றுக கொள்பவர் யாரேனும் உளரோ' என்று வினவ, சிஷ்யர்கள நோயின கடுமைக்கு அஞ்சி யாரும் முனவரவில்லை. சிறிது நேரம கழிந்த பின் மாறனேர நம்பி என்ற தாழ்ந்த குலத்தில் பிறந்த பாகவதர, தாம ஏற்றுக்கொள்வதாகவும், அதை ஆசாரிய ப்ரஸாதமாக போற்றுவதாகவும் மிக்க வினயமுடன் ப்ரார்த்தித்தார். இப்படியாக மாறனேர் நம்பியின் ஆசார்யாபிமானத்தால் ஆளவந்தார் நோய் நீங்கப்பெற்றார்.

திருக்கச்சி நம்பிகள காஞ்சியில் தேவப்பெருமாளுக்கு திரு ஆலவட்டம் (விசிறி) கைங்கர்யம் செய்துவந்தார். அவர் தீர்த்தமாடி கோயிலுக்குச் செல்லும்போது ஒருவன் அவருடைய திருவடித்துகளை தன் தலையில் பக்திசிரத்தையுடன் தெளித்து வந்தான். இதைக் கண்ட நம்பிகள் ஆச்சரியப்பட்டு வினவ, தேவப்பெருமாளுடைய அபிமானத்துக்கு இலக்கான ஆசாரிய ச்ரேஷ்டராகையால், அவருடைய திருவடிப்பொடி தனக்கு மோக்ஷஸாதகம் என்று நம்புவதாகவும், அதைத் தேவப் பெருமாளிடம் கேட்டுத் தனக்குச் சொல்லும்படியும் நம்பியை ப்ரார்த்தித்து, ஊர்ஜிதப் படுத்திக்கொண்டான்.

எம்பார் என்ற ஆசாரியர் தன் தாய் மாமனும் ஆசார்யருமாகிய திருமலைநம்பி திருமாளிகையில் ஸகல கைங்கர்யங்களையும் நிர்வஹித்து வந்தார். ஒருநாள் ஆசாரியருக்கு படுக்கை விரித்து அதில் எம்பார் முதலில்படுத்து எழுந்ததை எம்பெருமானார் கண்டு திடுக்கிட்டு திருமலை நம்பிகளிடம் தெரிவித்தார். திருமலை நம்பிகளும் எம்பாரை நோக்கி 'இவ்வபசா

ரத்திற்குப் பலன் தெரியுமோ' என்று கேட்க, எம்பாரும் 'நரக ப்ராப்தி' என்று கூற, திருமலை நம்பிகள் 'தெரிந்தும் ஏன் இப படி செயதீர்' என்று கேட்டார. எம்பாரும் நிதானமாய் பதட்ட மில்லாமல 'தேவரீர படுக் கையில் சயனிக்கும்போது திரு மேனியில் உறுததுதல, ஊர தல், கடித்தல முதலானவைகள இல்லாமல கண் வளர்ந்தருள வேண்டும் என்பதே அடியேனு டைய குறிக்கோள. இசசெ யலுககு நரக ப்ராபதி தான் என்றாலும் அடியேனுக்கு அது விருப்பமே' எனறு பதில் கூறி னார். இப்படிப்பட்ட ஆசாரியா பிமானத்தைக் கேடடதும் நமபி களும எம்பெருமானாரும வியப் பில ஆழ்ந்தனர. மறறொரு நாள அதிகாலையில தனனை யும் மறநது எம்பார ஒரு தேவ தாசி வீட்டின் வாசலிலே நின றிருநததை ஒருவர் கணடு எம பெருமானார எமபாரிடம் விளக் கம கேடக, எம்பார "தேவரீரு டைய கல்யாண குணங்களை மெட்டமைத்து இனிய இசையு டன அவ்வீட்டில் தாலாட்டுப பாடலைப் பாடிக்கொணடிருந தமையால் அநத குணநுபவத தில ஈடுபட்டு அஙகுமெய்மறநது நின்று விட்டேன் என்று தம்மு டைய ஆசார்ய பகதியை வெளி யிட்டார்.

எமபார் எம்பெருமானாரை விடடகலாது ஸதாஸர்வ கால மும கைங்கர்யபரராய ஞான பக்தி வைராக்யத்துடன இருந்து வந்தார். இபப டிப்பட்ட உயரந்த குணபூர்த தியுள்ள எம்பாரை ஸ்ரீவைஷ ணவரகள் சலாகிக்க, எமபா ரும அவைகளை ஆமோதித தபடி நடநது கொணடார. இதைககண்ட எமபெருமானார அவரை நோக்கி "உமமுடைய பெருமையை சொலலும போது, நீர நைசயானுஸநதா னம (தாழமையாயிருததல) பண ணுமல, உமமை நீரே புகழ வதுபோல தறபெருமை கொள ளலாமா" எனறு கேடக, எம பார "ஸ்வாமின, காளஹஸ தியில கெடடுப்போய மதாந தரத்தில் வழிதவறிச் சென்ற வனை அனுக்ரஹித்து வைண வனாக்கி அடியேனுக்கு இவ்வ ளவு பெருமைகள் தோற்றுவித் தது, தேவரீருடைய க்ருபாகடா க்ஷத்தினாலாகையால், இவை கள் தேவரீருக்கே அர்ப்பணம் என்று கொணடேன்" என்பதாக பதில் கூறினார். இப்படி ஒரு விலக்ஷணமான ஆசார்ய பக்தி யைக் கண்டு எல்லோரும் வியந தனர்.

உடையவரின் ஆசார்யரான பெரியநம்பிகளின் திருமகளான அத்துழாய் புக்ககததிலே வாழுங்காலத்திலே, ஒருநாள் தீர்த்தமாடச் செல்லுவதற்குத துணை வரவேணும்' என்று மாமியாரிடம் கேட்டவளவில், அவளும் 'உன் சீதன வெள்ளாட் டியை அழைத்துக்கொண்டு செல்' என்று அத்துழாயின மனம் நோவ அவள் பிறந் தக நிலையைச சுட்டிக்காட டினவாறு கூறினாள். (சீத னவெள்ளாட்டி = வேலைக காரி ) அத்துழாய் ஓடிவந்து தன் தந்தையிடம் முறையிட, அவர் அவளை எம்பெருமானா ரிடம் அனுப்ப, அத்துழாயிடமி ருந்து விவரம் அறிந்த எம்பெ ருமானார் அப்பொழுது அரு கிலிருந்த முதலியாண்டானைச் சீதனவெள்ளாட்டியாக அனுப பிவைத்தார். முதலியாண் டானும் ஆசாரியரின் கடட ளையை ஏற்றுக்கொண்டு அத் துழாயின் புக்ககத்தில் தாஸ்ய ருத்தியைச் செவ்வனே செய்து வந்தார். அங்குள்ளவரகளுககு முதலியாண்டானைத் தெரியா தாகையால் அவரை வேலை யாளாகவே எண்ணி கட்டளை யிட்டுக் கொண்டு வேலைகள வாங்கிக் கொண்டிருநதாரகள். பின்பு ஒருநாள் ஒரு சநதர்பப விசேஷத்தில் அவர புலமை வெளிப்பட, அவருடைய அடை யாளம தெரிநதபின் அபசா ரப்பட்டோமே என்று வருநதி அவரிடம் திருமபி எழுந்தருளு மாறு விணணப்பிக்க, முதலி யாண்டான 'ஆசாரியன் நியம னப்படி இங்கு வந்தேன். அவர திரும்பி வருமாறு அழைததா லன்றி நான் எப்படி போக முடியும்' என்று பதில்கூறினார. இதைக் கேட்டு அவர்கள எம பெருமானாரிடம சென்று விண ணப்பிக்க எம்பெருமானார "நீங கள தான் சீதனவெள்ளாட்டியை அபேக்ஷிததீர்கள் நான ஸந யாஸி. இவரதான் எனனி டம் இருநதார். அதனால அனுப்பிவைததேன். வேண டாமென்றால் திருபபி அனுப பிவிடுங்கள்" என்றார. இப படியாக முதலியாணடான தன் குலப்பெருமை, பாணடித் யம எல்லாவற்றையும பாராட டாமல, ஆசாரியரின் கட்டளை யைப பிசகாமல் நிறைவேற்றி, அவர் திரும்ப அழைத்துக்கொள் ளும் வரை அங்கேயே தாஸ்ய க்ருத்யம் செய்து தம் ஆசாரிய பக்தியை வெளிபபடுததினார.

எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் சாதிப்பதும், கூரத்தாழ்வான் திருவெழுத்து படுத்துவதும் நடந்துவந்தது. ஒருநாள உடை யவர் சாதிப்பது ஆழ்வானுககு திருவுள்ளத்தில் ஸரியாகப் படா தமையால் திருவெழுத்து சாத் தாமலிருக்க, உடையவர் நிர்ப்பந் தித்தும் எழுதாதிருக்க, உடை

யவர கோபங்கொண்டு எழுநது 'ஆழுவானை உதைத்து 'நீரே பாஷயம் செய்யும்' எனறு சென றுவிட்டார். அபபோது ஆழு வானை நோக்கி வருத் தப்படடு ஒருவர், 'ஆசாரியன கோபிதது்த் தளளிவிட்டாரே; நீர் என்ன நினைத்திருககிறீர் கள்' எனறு வினவ, ஆழ்வானும 'உடைமை உடையவன் இட்ட வழக்காயிருக்கும். அடியேனுக்கு இதில் அன்வயமில்லை' என்ற ருளினார்.' பின்னால் உடை யவர் யோசித்து, தன் தப்பை உணர்ந்து மிகவும் வருந்தி ஆழ் வானை அழைத்து அனு பித்தவாறே, மீண்டும் பாஷ்யம தொடங்கப்பட்டது. மற்றொரு சமயம் கூரத்தாழ்வான் நம்பெரு மாளைச் சேவிக்கக் கோயிலுக்கு எழுந்தருள, அப்பொழுது அர சாண்ட சோழன் வைணவ த்வே ஷத்தால் கோயில்காவலர்களி டம் எம்பெருமானாரைச் சேர்ந் தவர்களைக் கோயிலுக்குள் விட வேண்டாம் என்று கட்டளை யிட, அதன்படி ஆழ்வானை உள்ளே புகவிடாமல் தடுத்த னர். கூரத்தாழ்வானின் ஸாத் வீக குணம் மிக ப்ரஸித்தியா கையால், காவலர்களில் ஒருவன் 'இவர் பரமஸாது. இவரைவிட லாம்' என்றான். ஆழ்வான் மிக்க மனவேதனையுடன் 'இராமானு ஜரின் ஸம்பந்தமே வேண்டு வது; அவரைவிட்ட பகவத் சம் பந்தம் தேவை இல்லை' என்று திரும்பிவிட்டார். முதல் சம் பவத்தினால் சேதனன் ஆசா ரியரின் பொருள். பொருளுக் குடையவன் அவன் பொருளை எப்படி வேண்டுமானாலும் உப யோகப்படுத்தலாம். சொத் துக்கு அதில் ஸ்வதந்த்ரமில்லை என்ற கொள்கையை ப்ரகாசிப் பித்தார். இரண்டாவது சம்ப வத்தில் ஆசாரியசம்பந்தமே பக வத் ஸம்பந்தத்தைககாட்டிலும் சிறந்ததென்பதை வெளிபபடுத தினார்.

ஒருசமயம் சில தவேஷிகள் இராமானுஜரைக் கொலல நினைதது, அவருக்கு பிக்ஷை இடும் அனனததில் விஷம் கலக்க ஏறபாடு செய்தும், அது தெரிந்து தைவவசாத் உயிர் தப்பினார். இதனை அறிந்த ஆசாரியரான திருக்கோட்டியூர நம்பிகள் இதறகுப் பரிஹா ரம் காண்பதற்காக ஸ்ரீரஙகத திற்கு விரைநது பயணம மேற கொண்டார். அவர் காவேரி யின் அக்கரையில வருமபோது கண்டுகொண்ட எமபெருமானார தம் சிஷ்யர்களுடன் விரைநது சென்று ஆசாரியனை ஆறறு நடுவில் சந்தித்தவாறே சாஷ டங்கமாக தணடம் சமரபபித தார். அப்பொழுது நண்பகலா தலால் ஆற்றுமணல் மிகவும சூடேறி கால்பதிவதற்கும முடி யாதபடி இருந்தது. திருககோட டியூர் நம்பிகளோ கீழே மண லில் வீழுந்து கிடக்கும் தம் சிஷ்யனான எம்பெருமானாரை எழுநதிருக்கச் சொல்லவில்லை. இதைப்பார்த்துக் கொண்டிருநத சீடர்கள் அதிர்ச்சிககு உளளாயி னர். சிஷ்யகோஷ்டியில் ஒரு வரான கிடாம்பியாச்சான் என பவர் இந்த நீடிப்பை பொறுக் கமாட்டாமல "இதென்ன குரு சிஷ்ய பாவமோ, பூவைப்போல உள்ள திருமேனியை கடும் வெய்யிலில பொசுக்குமப டியான ஆசாரியன் திருவுள ளம் புரியவிலலையே' என்று உரக்கக்கூவி எமபெருமானாரின் திருமேனியைச் சூடுமணலிலி ருந்து பரிந்தெடுத்து தம மேலே கிடததிககொண்டார. உடனே திருககோட்டியூர நம பிகள் உமமைப்போல் உடை யவர திருமேனியில் மிகவும பரிவு உடையவரைத் தேடுதவற் குதான் நாம இபபடிச செய் தது" எனறு சொலலி இனி மேல நீரதான இங்கு மடைப பளளி கைஙகரயததை நிரவ ஹிததுப பரிமாற வேண்டும" என்று கிடாமபியாசசானை நிய மிதது எமபெருமானாரையும இனி வெளிபிக்ஷைக்கு போக வேண்டாம எனறு ஆஜ்ஞா பித்து திருக்கோட்டியூருககுத திரும்பிச் சென்றார்.

எம்பெருமானாருக்கு வடுக நம்பி என்று ஒரு சீடர், அவர் எம்பெருமானார் திருவடி களே உபாயம் உபேயம என்று கொண்டு அத்திருவடி நிலைக ளையே ஆராதித்து வநதார். ஒரு சமயம் எம்பெருமானார் வெளியூர் பயணத்தை முன் னிட்டு தம் திருவாராதனைப் பெருமாளைக் கூடவே எழுந்தரு ளப் பணணிக்கொண்டுவருமாறு வடுகநம்பியிடம் கூற, அவரும் உடையவர் ஆராதனபபெருமா ளையும் தம் ஆராதனத்திலிருக் கும் எம்பெருமானார் திருவடி நிலையையும் ஒன்றாக சேர்த் துக்கட்டிவர, எம்பெருமானார் இதைக் கண்டு 'இது என்ன் விபரீதம்' என்று கூற, வடுகநம்பி நிதானமாய் 'உஙகள் தேவரில எம்தேவர் குறைந்தவரோ' என்று பதில் பகர்ந்தார். வேறொரு சம யத்தில் பால் அடுப்பில் காய்ச் சும் போது, அரங்கன் திரு வீதி உலா கண்டருள எம்பெ ருமானார் 'வடுகா, பெருமாளை ஸேவிககவா' என்று கூற, வடுக நம்பி உள்ளேயே இருந்து 'உங் கள் பெருமாளை ஸேவிக்க வந்தால் எஙகள் பெருமாளுக் குளள பால் பொஙகிவழிநது விடும்' எனறு கூறி வெளி யில வரவிலலை. இபபடியாக அனேக சம்பவஙகள் அவரின் ஆசாரிய பக்தியை எடுத்துக்

காட்டும்வகையில் நடந்தேறியுள்ளன. இவருடைய ஆசாரிய நிஷ்டையைக் கண்டு எம்பெருமானாரே 'உமககுநாம தோற்றோம்' என்று அருளிச்செய்தார.

ஒரு சமயம் எமபெருமானார பகவத் விஷயகாலக்ஷேபம் சாதித்துககொண்டிருக்கையில் 'சிந்துபூமகிழும் திருவேங்கடத்து' எனும் கடடத்தில நம்மாழ்வாரின் இநதப் பாரிபபைப் பூரத்தி செய்யும பொருடடு திருமலைக்குச் சென்று நந்தவனம் அமைத்து, புஷபகைங்கர்யம் செயவார் எவரேனும் இங்கு உளரோ' என ப்ரஸ்தாபித்தார். அக்காலத்தில திருமலை குளிர்மிகுந்து, துஷட மிருகங்கள் கூடி அடர்ந்த காட்டினூடே வாஸம் செயவதற்கு மிகவும் அஞ்சவேண்டியிருந்தபடியால எவரும் முனவரவிலலை. அவவளவிலே அனநதாழ்வான், கோஷ்டியிலிருநது எழுநது நின்று மிகவும் பணிவுடன் 'அடியேனுக்கு அருள் புரிந்தால் இநத க்ஷணமே விடைகொள்கிறேன' எனறு ப்ரார்த்தித்தார. அவரது துணிவைக கண்டு மனமுவந்து 'திருமலையிலுளள கஷ்டங்களை அறிநதும என் மனோரதத்தை பூரததி செயயும வகையில உமது ஆசாரயபக்தியமைநததை மிகவும் பாராட்டுகிறேன. இவ்வளவு பெரிய கோஷ்டியில் நீரே ஆண்பிளளை' எனறு புகழ்ந்து அவரை ஆசிர்வதிதது விடைகொடுத்தார். இதுபறறியே அவ்வழியில் தோனறியவர்கள் அனநதானபிளளை என்று கூறிக்கொள்கினறுர்கள். ஆக, எம்பெருமானார நியமனத்தின்படி நந்தவனம அமைதது புஷ்பகைங்கர்யம் செய்து வருகின்றுர். இவருடைய ஆசாரய நிஷ்டையை ப்ரகாசப்படுத்துவதறகாக எம்பெருமான் சில சோதனைகளைச் செயயப் புகுந்தான். அதனபடி ஒருநாள் அனந்தாழ்வான் மாலைகட்டிககொணடிருககையில் திருவேங்கடமுடையான் உடனே கூப்பிடுவதாக செய்திவந்தது. பூககள மலருவதறகு முன் மாலை கட்டியாக வேண்டும. வேங்கடவன் நியமனப்படி உடனே சென்ருலோ இக்கைங்கர்யத்துககு பாதகமுண்டாகும். ஆகவே செல்லாமல் மாலைகட்டி முடிநத பின் திருமாலைக கூடையை எடுத்துக்கொண்டு சந்நிதி சேர்ந்தார். அங்கு திருவேங்கடமுடையான் முகம் கொடாமல் கோபம்காட்டி 'ப்ரம்மருத்ராதிகளும் மீறுவதற்கு அஞ்சும் நம் ஆணையை நீர் உபக்ஷை பண்ணி நிதானமாக வருகிறீர். இநத மாலையை நாம் சாத்திக் கொள்ளாவிட்டால் என்ன பண்ணுவீர். ஆகையால் உமக்கிங்கு வேலை இல்லை. நீர் திருமலையைவிட்டு போகலாம்' என்று பொரிந்து தள்ளிவிட்டார். இவைகளைச் செவி சாயத்த அனந்தாழ்வான் நிதானமாய் கீழ்வருமாறு விண்ணப்பித்தார். 'ஸ்வாமின், தேவரீர ஆணையை நிறைவேற்றுவதற்காக அடியேன் இங்கு வரவில்லை. நம்மாழ்வாரின் பாரிப்பை பூர்த்தி செய்யும் எம்பெருமானாரின் ஆணையின்படி இங்குக் கைங்கர்யம் செயய விடைகொண்டேன். ஆசார்யன உகந்த கைங்கர்யததை நிறுத்தி அபசாரப்படவேண்டாமென்றிருந்தேன். ஆசார்யன் நியமனப்படி மாலை சமர்ப்பித்துள்ளேன். தேவரீர் திருவுள்ளப்படி அணிவதோ நிராகரிப்பதோ செயவதில் அடியேனுக்கு அன்வயமில்லை. எப்பொழுதும போல ஆசார்யன் கட்டளையுளள வரையில் மாலையை இங்குக் கொண்டு வந்து சமரபிப்பேன். மேலும் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து இங்கு எழுந்தருளியுள்ளீர். நம்மிருவரும் இங்கு குடிபுகுந்துள்ளோம். அடியேனைக் காட்டிலும் தேவரீர் சற்றுமுன்பு குடிபுகுந்தீர். தேவரீராலேயே இவ்வுலகும் மேலுலகும் எம்பெருமானார இட்ட வழக்காக அருளப்பட்டது. 'பரன்சென்று சேர்ததிருவேங்கடமாமலை' என்பது ஆழ்வார்திருவாக்கு. இங்ஙனே இருகக தேவரீரின் கட்டளை என்னைத் திருமலையைவிட்டுப்போகுமபடி நியமிப்பது எப்படி பொருநதும்' என்று ஆணித்தரமாயும் உறுதியுடன் வேங்கடவனுக்குப பதிலளிததார. வேங்கடவனுக்கு இவ்வதிசய ஆசார்ய பக்திபபெருக்கைச் செவி சாயத்துக் குதூஹலம் மேலிட்டு, அனந்தாழ்வானைக் கண்குளிர கடாக்ஷிதது அனேக வரங்களை அனுக்ரஹித்தான்.

(தொடர்ச்சி அடுத்த இதழில்)

## ஏழு பிறப்பு

ஏழு பிறப்பு உயிர்கட்கு உண்டு என்பது இந்துக்கள் ஏற்றுக் கொண்ட நமபிக்கை.

அவை:-

1. தாவரம்
2. நீரில் வாழ்வன
3. ஊர்வன
4. பறப்பன
5. விலங்கு
6. மனிதர்
7. தேவர்.

திரு.ஆர்.பி.சாரதி-சென்னை.

(தொடர கட்டுரை)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## பொ

| | |
|---|---|
| பொருட்டா | - காரணமாக, நிமித்தமாக |
| பொருட்டாயம் | - பொருள்தாயம்-பொருட் பங்கு |
| பொருட்டாய மிலேன் | - யாரோடும் பொருள் பாகம் சமபந்தம் உடையேனல் லேன் |
| பொருத்தம் | - தகுதி; பொருந்தினபடி |
| பொருத்தமிலி | - பொருந்தி வாழப் பெருதவன் |
| பொருத்தி | - பணணுவித்து; சேர்த்து |
| பொருதவனார | |
| பொருதவன் | - பிரயோகம் செய்தவன் |
| பொருதழிய | - அழியப்பொருது |
| பொருதி | - பொராநின்ருய் |
| பொருது புனல் | - அலையோடு அலை பொருந்திய புனல்-நீர் |
| பொருதோள | - யுத்தத்தில் ஆவலுள்ள தோள் |
| பொருந்துதல் | - இசைதல்; சேருதல் |
| பொருந்தக்காட்டி | - தேறும்படி தெரிவித்து |
| பொருந்தலன் | - பொருந்தாதவன் |
| பொருந்தார் | - விரோதிகள் |
| பொருநல் | - திருத்தாமிரபருணி |
| பொருநற்சங்கு | - தாமிரபருணி ஆற்றில் சங்குகள் |
| பொருப்பு | - மலை; அழகு |
| பொருமுகை | - பொருமையால் வயிறு பொருமுகை; ஒன் ருெடொன்று எதிர் பொரு கிற முகத்தையுடைத்தாய் பிரதிபிம்பிககும்படி |
| பொருவரை | - சிறகெழுந்து பொருது கொண்டு திரிகிற மலை |
| பொருவல்லன் | - பொரு-ஒப்பாய், அது நேர் நிறகுமாதாய், அத்தால் தடையைச் சொல்லிறுய், தடையுடையனல்லன் என் றபடி; அடியார்கட்கு தடை யறறவன், பொரு-எதிராய் தடையைக் காட்டுகிறது; பொரு-பொருத்தமாய் அடி யாரைச் சேரவல்லவன் என்றபடி |
| பொருவற்ருள் | - பொரு-சேர்த்தி. அதை அற் ருள். உபமானம் இல்லாத வள் பொரு- ஒப்பு |
| பொருவாகி நின்-ருன் | தடையாய் நின்ருன்; அவற்ருல் மேலிடமுடியாத படி நினருன்; அவற் ருல் தன்னை இல்லை செய்யமுடியாதபடி தடங்க லறறு நின்ருன்; தடையா லும் ஆகிநின்ருன்; ஸிதத னாய் இருந்தான். |
| பொருவான் | - பொருவதாக |
| பொருவில் சீர்ப்-பூமி | ஒப்பில்லாத சீரையுடைய பூமி. பூமிக்கு சீர்மையா வது பொறை என்னும் குணம். |
| பொருவு | - ஒப்பு; தடை; யுததம்; செறிவு; பொருத்தம் |
| பொருள் | - புருஷார்த்தம். புருஷனாலே யாசிக்கப்படுவது; உபாயம் |
| பொருளவயினதி காரம் | - பொருள் ஈட்டும் திறம |
| பொருள் கையுண்-டாய் | கையில் பொருள் உண டாய் |
| பொருள் முடிவு | - அர்த்தத்தின் நிர்ணயம் |
| பொருள்மேல் பரிவு- | தலைவியோடு அநுபவத் துக்கு உறுப்பாக பொருள் சம்பாதிக்கப் போகை |
| பொருளவையில் | - பொருள் வினையென்று சொல்லப்படுமவையில்; பொருளுக்காகப் பிரியும் பிரிவுகள் |
| பொருளதிகாரம் | - வேறுதேசம் சென்று பணம் சம்பாதிக்கும் பிரகாரம் |
| பொருளாதல் | - பொருளென்று |
| பொருளினபம் | - பொருளும் இன்பமும்; அர்த்த காமங்களா |
| பொல்லல் | - துளைத்தல் |
| பொல்லாவரக்கர் | - இராவணன் |
| பொல்லாக் கருமா-ணிக்கம் | தொளைக்காத கருமாணிக் கம். பொக்கை யும் போளையும் என்பதில் போளை என்பது பொள் ளல் பொளிந்தது, பொல் லலாயிற்று |
| பொல்லாக் குறளரு- | மிகவும் விலக்ஷணமான வாமனன் |

பொல்லா மூக்கு - சூர்ப்பணகையின் மூக்கு
பொல்லா நிலம் - மயான பூமி
பொல்லா வாக்கை- துன்பத்தை விளைவிக்கும் தேகம்
பொல்லான் - துஷ்டன்
பொலக்குண்டலம் - பொற்குண்டலம்
பொலம் - பொன்
பொலன் - ஆபரணம்
பொலன்கலன் - புலனும் உண்டு; பொன்னாபரணம் புலன்-இந்திரியம், கலன்-ஆபரணம்
பொலார் - பொல்லாதவர்
பொலாவி ராவணன் - பொல்லாத இராவணன்; தாயையும் தந்தையையும் பிரித்தபயல்
பொலி - அம்பாரம்
பொலிக பொலிக பொலிக - சாந்தி, சாந்தி, சாந்தி; பொலியவேண்டும்
பொலிகை - தகுதி, வளம்
பொலிவு - அழகு; வளம்; விளங்குதல்
பொலிந்து நின்றபிரான் - ஆழ்வார் திருநகரி ஆதிநாதனுக்குத் திருநாமம்; சொன்னார் சொன்னபடிக்கு எல்லாம் அவ்வருதாயிருக்கும் பிரான்
பொலியூட்டு - வட்டி வருமானத்தைக் கொண்டு நடக்கும்படி செய்த நிலையான கைங்கர்யம்; பொலிவைக் கொண்டு ஊட்டும் கைங்கர்யம்; பொலிவு-வருமானம்
பொழிதல் - சொரிதல்; வருஷிக்கை; உலகம்
பொழில் வாயகன் - பொழிலினுள்ளே
பொழிலளந்த புள்ளூர்தி - பூமியை அளந்தவனும் கருடவாகனனுமானவன்
பொழிவனர் - பொழிபவராய்க் கொண்டு
பொள்ளை - துளை
பொள்ளைக்கரம் - யானையின் துதிக்கையில் துவாரம் உள்ளதால் பொள்ளைக்கரம் எனப்பட்டது.
பொளிந்து - சில்லியாய், ஓட்டையாய்
பொற்கலை - பொன்னாடை
பொற்கை - அழகிய கை; பொன-அழகு என்றிருப்பதால் என் தங்கமே என நாம் கொஞ்சுவதற்கு என் அழகே என்று பொருள்
பொற்களரி - கண்வட்ட ஸ்தலம்; தங்கசாலை; பொற்பணி செய்யுமிடம்; தட்டானுடைய காரியச்சாலை, அதாவது சுரிகள் கொட்டப்பட்டு நிரம்பியும் பொன் முத்துக்கள நிறைந்தும நெருபபு ஜ்வலித்தும் இருக்குமிடம என்பர் காஞ்சீ ஸ்வாமிகள
பொற்கால் பொலிய - நன்மை காரணமாக; நலலடிக்காலமாக
பொற்கிண்டி - தங்கக்கிண்டி; மூக்குளளது கிண்டி
பொற்சுரிகை - பொன்னால் செயத உடைவாள்
பொற்படம் - பொன்னாடை படம்-துணி
பொற்பாவை - மிகவும உயர்நத ஒருகாரணமின்றி இயற்கையான பெண்மையை உடைய பெரிய பிராட்டி.
பொற்பு - அழகு; ஸமீபம, பலம
பொற்றாமரை - திருக்குடந்தையிலுள்ள புஷ்கரிணி
பொற்றை - மலைக்கும், யானைகள பல திரிகின்ற காட்டுககும பெயர்
பொறியார் மஞ்ஞை - புள்ளிகள் நிறைந்த மயில
பொறியிலேன் - பொறியிலே-சப்தம் முதலான விஷயங்களில அகபபட்டு நின்றேன்
பொறியுகிர் - பலவித வர்ணமான நகம்
பொருவாணை - செலலுபடியாகாத ஆணை
பொறிகை - எண்ணேற்கை
பொறிபுறந் தடவி - அஸாரமான நெற்பொறி மீது வெல்லம் தடவி இனிமையாக்குதல்; உள் ஒருபடியாயிருகக வேறு பொருளைக் கொண்டு மினுக்கப் பண்ணிவைப்பது
பொறி எழுகை - தணலாய்ச் சுடுவது
பொறியொற்றி - மேலெழுநதிட்டு; ஒபபமிட்டு
பொறிவாசல் - இந்திரியதுவாரம்
பொறிவாளர் - புத்திசாலிகள்
பொறுத்தமலை - தரித்துக்கொணடு-சுமந்து கொண்டு நின்ற மலை
பொறுத்திரைப் போதிரு - சிறிது போது பொறுத்து இரு
பொறை தீர்த்து - பாபத்தைப் போக்கி
பொன்குலாம் பயலை - பொன்னைக்குலாவா; கொண்டாடா நின்றுள்ள பயலை- நிறததில் வேறுபாடு
பொன் சாய்க்கும்-புனலரங்கம் - பொன்னின் நிறத்தைத் தன்னிறத்திலே தள்ளும்படியான நீர்வளம் மாறாத திருவரங்கம்
பொனதோய்வரை - பொன்-பெண். பிராட்டி தோய்ந்த மார்பு. பொன்-ஆபரணம். அது

| | | | |
|---|---|---|---|
| | தோய்ந்த மார்பு | பொன்வட்டில் | - தஙகக்கிண்ணி |
| பொன்படாதிடம் | - பொன் உண்டாகாத இடம் | பொனனன் | - இரணியன |
| பொன்படு குட்டம் | - பொன் உண்டாகும் ஆக ரம; தங்கச்சுரங்கம் | பொன்னி | - காவிரி |
| பொன்பெயரோன் | - இரணியன் | பொன்னிதனெ பால | - காவரியின் தெனகரையில் |
| பொன் பெற்றேர் | - வசிட்டர் முதலான ஆசிரி யர்கள | பொன்னி நாடன | - காவிரியையுடைய நாடடுக குத தலைவன |
| பொன்போல் | - அழகு விளங்கும்படியாக | பொன்னியல கிண்கிணி | - பொனவடததிலே தோவைபபட்ட கிண்கிணி |
| பொன் மகள் | - உயர்ந்த பெண்-பிராட்டி | | |
| பொனமணி | - பொன் கயிற்றில தூஙகும மணி. | பொனனியரும் வேள்வி | - விருப்பப்பட் டாருடைய விருப்பங்களை யெல்லாம் கொடுப்பதா கையாலே உயர்ந்த யாகம் |
| பொனமலர் | - பொன் போலிருக்கிற மலர் | | |
| பொன்வடம் | - அழகிய தங்கஅரை நாண் | | |
| பொன்வாணியன் | - தங்கம் விறபவன்; தட் டான் | பொனனேய்நெய | - செவவி குன்றுமல உருககி துஞ்சி னதாகையாலே பொனனி றமுடைய நெய். சிவக்கக காயச்சினது. |
| பொன் விசும்பு | - ஒளிமயமான பரமபதம் | | |
| பொன்றி | - சரீரம் | | |
| பொன்றுதல் | - முடித்தல்; அழித்தல் | | |
| பொன்னகலம் | - வீறுடைத்தான மார்பு | | |
| பொன்னடிக்கள் | - உயர்ந்த திருவடி | பொன்னும் இரும்புமான விலஙகு | - புண்ய பாபஙகள்; புணணி யம் பொன்போலே விரும் பததக்கதாயினும மோக்ஷத் துககு விரோதி. பாபம இரும்பு விலங்கு என்பர் வேதாநத தேசிகர். |
| பொன்னப்பன் | - பொன்போலே உபகார கன; அநுபவிககததகக வன். திருவிண்ணகர திவ் யதேசத்து எம்பெருமான் ஐவரில் ஒருவர் திருநாமம் | | |
| பொன்னரிமலை | - பொனனாலே உண்டாய், அரி-ஒளியுடைய மலை | பொனனூலினன | - அழகிய பூணூலையுடைய வன |
| பொன்னரும்பாரம் | - பொன்னுமாய் அருமபியி ருக்கிற உட்கழுத்து ஆரம் | | |

(தொடரும்)

# திருமலைக்கு நடந்து வரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள்

தங்களுடைய வேண்டுதல்களில் ஒன்றுக பலர் திருமலைக்கு நடந்து வருகினறனர். தி.தி. தேவஸ்தானம் அவர்களுக்காகக் கீழ்வரும் வசதிகள் செய்து உள்ளது.

* யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தான சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல்கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில் காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.
* காளி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்மசுவாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன.
* நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன்வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.
* மறைவிடங்கள் உள்ளன. ஓய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.
* திருமலைக்குச் செல்லும் வழியில யாத்திரிகர்களை களவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலி ருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, கூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல் இரவு நேர ரோநது ஏற்பாடுகள் உண்டு.

# ஸ்ரீமந் நாதமுனிகள்

பஞ்சு, அரங்கநாதன் கீழ அரங்கம்.

## முன்னுரை :

பன்னிரண்டு ஆழ்வார்களாலும் அருளிச்செய்யப்பெற்றவை, மயர்வறு மதிநலம் அருள்பவை நாலாயிர திவ்யப்பிரபந்தம் ஆகும். கால ஓட்டத்தில் இவை அழிந்தன. அவைகளை மீளவும் இவ்வுலகிற்கு வழங்கியவர் நாதமுனிகள். இவர் ஆச்சாரியர் பரம்பரையில் முதலிடம் பெறுகிறார். இவரது அருள் வரலாற்றை சிறிது காணலாம்.

## அவதாரம் :

வீரநாராயணபுரம் என்ற ஸ்ரீவைஷ்ணவ அபிமான ஸ்தலம் இன்றைய தென்னார்க்காடு வள்ளலார் மாவட்டத்தில் காட்டுமன்னார்குடி என்ற பெயரில் உள்ளது. இங்கே இறைவன் கிழக்கே திருமுகம் கொண்டு நின்ற திருக்கோலத்தில் வீரநாராயணப்பெருமாள் என்ற திருநாமம் கொண்டு எழுந்தருளியுள்ளார். வீரநாராயணர் ஏரிதான் வீராணம் ஏரி என்று மருவி வழங்குகிறது.

இங்கு அந்தண மரபில் சொட்டைக்குலத்தில் ஈசுவர பட்டாழ்வார் என்பவருக்கு சோபகிருது ஆண்டு , ஆனிமாதம், அனுஷ நட்சத்திரத்தில் சுக்லபட்ச திரயோதசி திதியில் கஜாநநர் (யானை முகர்) அம்சமாய் நாதமுனிகள் அவதாரம் செய்தார். இவரது பிள்ளைத் திருநாமம் அரங்கநாதன் என்பது ஆகும்.

## கல்வி :

இவருக்கு இளமையிலே வேத, ஆகம, உபநிஷத, புராண, இதிகாச, காவியப் பயிற்சிகள் முறைப்படி கொடுக்கப்பட்டது. கற்றலின் பயனாக பக்குவம் அடையப்பெற்ற இவர் முனிவராய் விளங்கினார். அனைவரும் இவரை அரங்கநாத முனிவர் என்று போற்றினர். நாளடைவில் இவர் 'நாதமுனி' என்றே கொண்டாடப்பட்டார். நாதமுனிகள் வீரநாராயணபுரத்தில் உள்ள பெருமாளுக்கு தொண்டு செய்து வந்தார்.

## ஆராஅமுதே பதிகம் :

ஒருநாள் வீரநாராயணப்பெருமாளை தரிசிக்க தெற்கு திசையில் இருந்து சில ஸ்ரீவைஷ்ணவர்கள் வந்தனர். அவர்கள் இறைவனை வணங்கி வழிபட்டு கீழ்வரும் நம்மாழ்வார் பாடலைப் பாடிப் போற்றினர். நாதமுனிகளும் பாடலின் உயர்வில், எளிமையில மனம் நெகிழ்ந்தார். அதுவே வைணவ உலகிற்கு மீண்டும் நாலாயிரம் பாடல்கலையும் தந்தது!

"ஆரா அமுதே! அடியேன்
உடலம் நின்பால் அன்பாயே
நீராய், அலைந்து கரைய
உருக்குகின்ற நெடுமாலே!
சீரார் செந்நெல் கவரி வீசும்
செழுநீர்த் திருக்குடந்தை
ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்
கண்டேன் எம்மானே!

-திருவாய்மொழி (5-8-1)

## ஓர் ஆயிரத்துள் இப்பத்தும் :

பாகவதர்கள் பாசுரம் முழுவதையும் சேவித்தனர். பாடலின் ஒரு வரிதான் நாதமுனிகளின் சிந்தையைத் துளைத்தது. பெரும் முயற்சிகள் எடுக்கச் செய்தது. அந்த அற்புதச் சொல்தான் என்ன?

"உழலை என்பின் பேய்ச்சி முலையூடு
அவளை உயிர் உண்டான்
கழல்கள் அவையே சரணாகக்
கொண்ட குருகூர்ச் சடகோபன்
குழலின் மலியச்சொன்ன ஓர்
ஆயிரத்துள் இப்பத்தும்
மழலை தீரவல்லார் காமர்மானேய்
நோக்கியர்க்கே"

திருவாய்மொழி (5-8-11)

## ஆயிரம் ஆருக்கும் தெரியுமோ?

மேற்கண்ட பாடலின் "ஓர் ஆயிரத்துள் இப்பத்தும்" என்ற சொற்கள் நாதமுனிகள் உளளத்தில் ஐயத்தை எழுப்பியது. பத்து பாடல்களைக் கேட்டோம். ஆயிரத்தில் மீதம் பாடல்கள் எங்கே? பாடிய அடியார்களையே கேட்டார். அவர்களோ எங்களுக்கே தெரிந்தது பத்து தான் என்று சொல்லி விட்டனர். நாதமுனிகள் அன்று முதல் நம்மாழ்வாரின் ஆயிரம் பாடல்களையும் தெரிந்தவரைத் தேடலாயினர். ஆனால் எங்கும் யாருக்கும் தெரியவில்லை. நாதமுனிகள் மனந்தளர்ந்தார். இறுதியாக நம்மாழ்வார் அவதரித்து பதினாறு ஆண்டுகள்

யோகம் செய்த திருப்புளியாழ்வார் உள்ள திருக்குருகூர் சென்றூர். ஆனால் அங்கும் பயன் ஏதும் இல்லை. தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத நாதமுனிகள் பராங்குசதாசரைக் கண்டார்.

### கண்ணிநுண் சிறுத்தாம்பு

பன்னிரண்டு ஆழ்வார்களில் பத்து பாடல்களை மட்டுமே பாடியவர்கள் இருவர். திருப்பாணுழ்வாரும், மதுரகவி ஆழ்வாருமே அவர்கள். பாணராவது அரங்கநாதனைப் பாடினார். மதுரகவிகள் தெய்வத்தையும் பாடவில்லை. அவர் அறிந்தது எல்லாம் குருநாதர் நம்மாழ்வாரையே. எனவே பத்து பாடல்களால் நம்மாழ்வாரைப் பாடினார். குரு பக்தியின் மகிமையால் ஆழ்வாராகப் போற்றப்படுகிருர். "கண்ணிநுண்சிறுத்தாம்பு" என்று தொடங்கும் பத்து பாடல்களே அவை.

### பன்னீராயிரம் உரு :

மதுரகவி ஆழ்வார் பரம்பரையில் வந்த பராங்குச தாசர் என்பவர் "நாதமுனிகளுக்கு" கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பாசுரத்தை உபதேசித்தார். நாதமுனிகளும் நம்மாழ்வாரை தியானித்து ஆயிரம் பாடல்களையும் தரவேண்டும் என்று பிரபந்தத்தை பன்னீராயிரம் உரு ஜபித்தார். நாதமுனிகளின் பக்திக்கும் விடாமுயற்சிக்கும் நம்மாழ்வார் காட்சி தந்து திரு இலச்சினையான சங்கு, சக்கரங்களை அணிவித்து ஞானமும் அருளினார். திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களையும், மேலும் பிற ஆழ்வார்களின் பாசுரங்களையும் தாமே உபதேசம் செய்து அருளினார். இவ்வாறு நாதமுனிகள் நாலாயிரம் பாடல்களையும் மீட்டார்.

### பகல்பத்து, இராப்பத்து உற்சவம் :

ஸ்ரீரங்கம் அரங்கநாதர் ஆலயத்தில் திருமங்கை ஆழ்வார் காலத்தில் இராப்பத்து உற்சவம் நடைபெற்றது. பிறகு நாளடைவில் நின்று போயிற்று. நாதமுனிகள் இராப்பத்து உற்சவத்தை மீண்டும் தொடங்கினார். மேலும் பகல் பத்து என்ற உற்சவத்தையும், இயற்பா சாற்று மறை என்ற ஒருநாள் உற்சவத்தையும் தொடங்கி வைத்து சிலகாலம் சென்றபின் திருநாட்டுக்கு எழுந்தருளினார். ஆளவந்தார் நாதமுனிகளின் பேரன் ஆவர்.

### முடிவுரை :

பன்னிரு ஆழ்வார்களால் அருளப்பெற்ற நாலாயிர திவ்ய பிரபந்தம் தமிழ்வேதம். இவற்றை ஓத தெளியாத மறைநலங்கள் தெளியும். அழிந்து பட்ட நாலாயிரத்தையும் நாதமுனிகள் மீண்டும் வெளிப்படுத்தினார். ஒவ்வொரு தமிழரும் குறிப்பாக வைணவத்தமிழர்கள் நாலாயிர திவ்ய பிரபந்தத்தை கட்டாயம் படித்து ஸ்ரீமந நாராயணன் அருள்பெற வேண்டுகிறேன்.



## செல்ல வேண்டியது திருமலை
## மெல்ல வேண்டியது பச்சிலை

எம்பெருமான் வெங்கடாஜலபதிக்கு நாம் மாலையாய் அணிவித்து மகிழும் துளசியின் மகிமைகளை காண்போம்.

துளசி இலைகள் ஐந்துடன் வல்லாரை இலைகள் மூன்று மிளகு ஒன்று சேர்த்து மென்று காலை, மாலை வெறும் வயிற்றில் தொடர்ந்து சாப்பிட சளி, ஜுரம் குணமாகும். தொற்று நோய்கள் தாக்காது. அடிப்பட்ட வீக்கம், வலி குணமாகும். ஆரம்ப யானைக்காலுக்கு அருமருந்தாகும். சர்க்கரை வியாதி உள்ளவர்கள் சாப்பிட சதை அழுகல் நோய் ஏற்படாது. டான்சில் வீக்கம், மூக்கில் சதை வளர்ச்சி குணமாகும். குடல் வாழ் அழற்சி நோய் ஏற்படாது. ஆருத புண்கள் ஆறும்.

நிலம் , நீர், காற்று ஆகியவற்றிலுள்ள மாசுவை நீக்கி சுற்றுச் சூழல் காப்பதில் துளசி முதலிடம் பெறுகிறது. ஏனைய தாவரங்களைவிட அதிக அளவில் பிராண வாயுவை துளசி வெளியிடும். எனவே வீட்டில் துளசி மாடம் வைத்து சுற்றிவரும் பழக்கத்தை முன்னோர்கள் முறையாய் ஏற்படுத்தியிருந்தார்கள். எனவே வீட்டைச் சுற்றி துளசி செடிகள் வளர்ப்போம். சுற்றுச்சூழல் மாசுவை தகர்ப்போம்.

சளி, அழற்சி, சர்க்கரை வியாதி உள்ளோரும் டைபாய்டு, மஞ்சள் காமாலை, காலரா போன்ற நீரினால் பரவும் நோய்கள் உள்ள சமயங்களில் துளசி ஊறிய நீர் அருந்துவது மிகவும் நல்லது.

தொகுப்பு: டாக்டர் கோ. மணிவாசகன் - தேவூர்.

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீ ராமாநுஜர்

திரு. மா. சீதாராமன் - காஞ்சிபுரம்.

மறுநாள் இரவு தம் சீடர்களை இராமாநுசர் தம்மிடம் வருமாறு அழைத்தார்.

"இன்றிரவு முழுவதும் தனுர்த்தாசரை எம்மிடத்திலேயே வைத்திருக்கிறேன். நீங்கள் அனைவரும் அவர் வீட்டிற்குச் செல்லுங்கள். உறங்கிக் கொண்டிருக்கும் சமயம் பார்த்து அவர் மனைவியாரின் நகைகளைத் திருடிக் கொண்டு வந்துவிடுங்கள். பிறகு என்ன நடக்கிறது என்று பார்ப்போம்!" என்று கூறிச் சீடர்களை அனுப்பி வைத்தார்.

தன் கணவருடைய வருகையை எதிர்பார்த்த வண்ணம் ஹேமாம்பாள் கதவைத் திறந்தே வைத்திருந்தாள். எனவே, சீடர்கள் எளிதாக வீட்டினுள் சென்றனர். ஹேமாம்பாள் உறங்குகிறாள் என்று எண்ணி ஒரு பக்கத்திலுள்ள நகைகள் அனைத்தையும் கழற்றிவிட்டனர். எனவே, மறுபக்கத்திலுள்ள நகைகளையும் கழற்றிக் கொள்ள வசதியாக ஒருக்களித்து படுத்தாள். மறுபக்க நகைகளையும் கழற்றிக்கொண்டு ஓட நினைத்தவர்கள் ஹேமாம்பாள் விழித்துக்கொண்டாளோ என்று அச்சமுற்றவராய்க் கிடைத்த நகைகளை மட்டும் எடுத்துக் கொண்டு ஓடிச் சென்றுவிட்டனர். சீடர்கள் வருவதையறிந்த இராமாநுசர் தனுர்த்தாசரை அவர் வீட்டுக்குச் செல்லுமாறு அனுப்பிவைத்தார்.

நகைகளுடன் வந்த சீடர்களை அழைத்தார். தனுர்த்தாசரைத் தொடர்ந்து சென்று அவர்கள் வீட்டில் நடப்பவற்றை அறிந்து வாருங்கள் என்று இராமாநுசர் அனுப்பி வைத்தார்.

தனுர்த்தாசர் தம் இல்லத்தை அடைந்தார். தம் மனைவியின் நிலையைக் கண்டார். நடந்ததைக் கேட்டறிந்தார்.

"நாதரே! வறுமையின் காரணமாக அந்தணர்கள் சிலர் நம் வீட்டிற்குத் திருடவந்தனர். அப்போது நான் பெருமாளின் திருநாமங்களை ஜபித்தவாறும் தங்களின் வருகையை நோக்கியவாறும், படுத்திருந்தேன். அடியாளாகிய நான் தூங்குவதாக எண்ணி ஒரு பக்கத்து நகைகளைக் கழற்றினர். மறுபக்க நகைகளையும் கழற்றிக் கொள்ள வசதியாக மாறிப்படுத்தேன். நான் விழித்துக் கொண்டதாக எண்ணி அவர்கள் அச்சத்துடன் ஓடிவிட்டனர்.



இவற்றைக் கேட்டு தனுர்த்தாசர் பெரிதும் துக்கித்தார். "என்ன காரியம் செய்துவிட்டாய்! நகைகளை நன்கொடையாக அளிக்கிறோம் என்ற அகம்பாவம் உனக்கு இருந்திருக்கிறது. ஆண்டவனை நினைந்தவண்ணம் ஏதுமறியாமல் நீ இருந்திருப்பாயாகில் நீ உறங்குவதாகவே எண்ணி அவர்கள் அனைத்தையும் கழற்றிச் சென்றிருப்பர். நான் என்ற எண்ணம் உன்னை விட்டு நீங்காததாலன்றோ கிடைத்த நல்ல வாய்ப்பும் நழுவிவிட்டது" என்று கூறி நிறுத்தினார்.

இதுகேட்டு ஹேமாம்பாள் அழுதுகொண்டே சொல்லலானார். "ஸ்வாமி! என் மனத்தில் மயக்கம் தோன்றாதவாறும் அகம்பாவம் எப்போதும் இடம் பெறாதவாறும் தாங்கள் தான் எனக்கு நல்லருள் புரியவேண்டும்!" என்று மனமுருகி வேண்டி நின்றார்.

மறைவிலிருந்து இவற்றையெல்லாம் கண்டும் கேட்டும் நின்று கொண்டிருந்த சீடர்கள் மீண்டும் திருமடத்துக்குச் சென்று நடந்தவற்றையெல்லாம் விளக்கமாகக் கூறினார்கள். இவற்றையெல்லாம் அமைதியுடன் கேட்டு அனைவரையும் உறங்கச் செல்லுமாறு இராமாநுசர் அனுப்பி வைத்தார்.

பொழுது புலர்ந்தது. சிம்மாசனாதிபதிகள், பிராமணச் சீடர்கள் முதலானோர் காலைக் கடன்களை முடித்து நீராடிவிட்டு அத்யயனம் செய்யும் பொருட்டு யதிராசரை அடைந்தனர்.

உடையவர அவரகள அனை வரையும அமைதியாக அமரு மாறு கூறினார. அரியதொரு அறிவுரை புகலத தொடஙகி னார்.

"நுண்ணறிவு மிகக பணடி தர்களே! நூலறிவுமிகக புல வர்களே! குல மதம, கலவி மதம, தனமதம, ஆகிய மும்ம தஙகளால மனிதன சீரழிகின றுன. கலவி மதம மிகக நீங கள நேறறிரவு கௌமீனம கிழிநதுவிட்டதென்று ஒருவரை யொருவர் எவவளவு கீழ்த் தரமாகத தாக்கிக கொணடீர் கள். நகைகளையெலலாம பறி கொடுத்த பின்பும தனுரத்தா சரும் அவர் துணைவியாரும எவ்வளவு மன அடககத்துடன நடநது கொணடனர.

எனவே, அகந்தை கொண்ட வனைப் பிராமணன என்பதா? அடக்கம் மிககவனைப் பிராம ணன எனபதா? எனபதனை நீஙகளே முடிவு செயது கொள ளுங்கள்!" என்று கூறி முடித் தார்.

"எஙகள குருவே! தனுரததா சர பிராமணர் போல் நடநது கொணடார். நாஙகள இழிந தவர்கள போல ஒருவரையொ ருவர் தாக்கிக் கொணடோம்!" என்று வெட்கத்துடன கூறித தலைகுனிந்து நினறனர.

"சீடரகளே! இனம் பற றிய கருவத்தை விடடொழி யுங்கள! நல்லொழுககத தைக கடைபபிடிக்க முயலுங கள்! பிறபபில் அனைவரும சமமே! பிறப்பினால உயரநத வன எனறு கூறிககொளபவன மனித குலததுக்கே வைரியா வான! ஆனமா என்ருல் என்ன எனபதைப் புரிந்து கொளளுங கள! ஆனம லாபததுககாகப பாடுபடுஙகள! கலவி, செலவம, பிறபபு ஆகிய அனைததை யுமவிட குணமே உயரநதது! எனவே, நலநதரும நறகுணத தால நாளும உயரபபாடுபடுங கள!" எனறு இராமாநுசர கூறிய அறிவுரையால சீடரக ளின அஞ்ஞான இருள அகனறு ஞான ஒளி பெருகிறறு!

## மகாபூரணர் பரமபதம் அடைதல்

தனுரததாசர உடையவரின திருவடிககே சேவை செயது வருவதனைப பெரும பாககிய மாகக கருதி வாழ்ந்து வநதார. நாளகள சில சென்றன.

இராமாநுசரின குருவான மகாபூரணர ஒருநாள பிராமணர அலலாத ஒருவரின சடலததுக குத தீவைககும சடஙகினைச செயதார். எனவே, பிராமணர கள மகாபூரணரை வெறுததொ துக்கினர. பிராமணர செய் யத்தகாத செயலைச் செய்தா ரென்று அவரைக கண்டிக்கவும தொடங்கினர.

இதனைக கேள்வியுற்ற இரா மாநுசர் உண்மையை அறிய விருப்பத்துடன தம் குருவின் இருப்பிடம் அடைந்தார். மகா பூரணரை உறறூர அனைவ ரும வெறுத்தனர என்பதனை யும, அதனால் அவருடைய திரு மகளாரான அத்துழாய் அம்மை யார, தம் மாமனார இல்லத் திலிருந்தும் வந்து தம தகப்ப னாருக்குப் பணிவிடை புரிகிருர் என்பதனையும அறிநது மனம் வருந்தினார்.

இராமாநுசரின் வருத்தத்தைக் கணட மகாபூரணர அமைதி யாக கூறலானார்.

"இராமாநுச! சாத்திரத்தில் கூறியுள்ளபடிப பிராமணர் ஒரு வன பிராமணன அல்லாத ஒரு வனுக்கு ஈமச் சடங்கு செய தல் எனபது பொருத்தமற்ற செயல்தான்! அதனை அற நூல்கள ஏற்றுககொள்ளமாட்டா! ஆனால், அறம என்பது எது தெரியுமா? சானறோர்கள் உலகி யலில் எவவாறு நடைமுறைக்கு ஏறப ஒழுகினாரகளோ அதுவே தான அறம எனப்படும்.

பறவைககுலததுக்குப் பிறந்த சடாயுவுககு இராமபிரான் ஈமக் கடன செய்யவில்லையா? க்ஷத் திரிய குலத்தில் பிறந்த தருமர் நான்காம் வருணததில் தோன் றிய விதுரரைப் போற்றி வழி பாடு செய்யவில்லையா?

உணமைப பக்தனுக்குச் சாதி ஏது? மதமேது? என்னால் தீயிலிடபபட்டவன் என்னைக் காட்டிலும பலமடங்கு பகதியிற் சிறந்தவன். அவனுக்கு இறுதிச் சடஙகு செய்வதன் மூலமநான் பெறற்கரிய பேறு பெற்றவனா கிவிட்டேன்!"

மகாபூரணரின் பதிலைக் கேட்டு இராமாநுசர் மனநி றைவும் மகிழ்வும கொண்டார். அவர் அருளிய ஞான வுரைக்கு உவநது மீணடும மீண்டும் வணஙகலானார்.

ஒருசமயம் இராமாநுசரை மகாபூரணர் சாஷ்டாங்காகமாக விழுநது வணங்கினார். அப் போது, இராமாநுசர அமைதி யாகவே இருந்தார. அருகில் இருந்தவரகள் இராமாநுசரிடம, "தங்கள் குருவானவர் தங்களை வணஙகும் போது தடுக்காமல் மௌனமாக இருந்தது தரும மாகுமோ?" என்று வினவினார்.

"குருவின் விருபபப்படி நடப்ப தன்றே நல்ல சீடனின இலட்

சனம். குருவானவர் நம்மை உயர்த்தினாலும், தாழ்த்தினாலும், நாம் அமைதியாகவே இருக்க வேண்டும். குருவைத் தடுக்கவோ தட்டிக் கேட்கவோ சீடனுக்கு எவ்வித உரிமையுமில்லை. இதனாலேயே நான் மெய்ம்மறந்து மௌனமாக இருந்து விட்டேன!'' என்று இராமாநுசர் பதிலளித்தார்.

சீடர்கள் மகாபூரணரிடம் இதுபற்றித் தங்கள் ஐயத்தைப் போக்க வேண்டும் என்று பணிந்து வேண்டிக்கொண்டனர்.

"இராமாநுசரின் திருவுருவில் என் ஆசார்யராகிய யாமுனாச்சார்யர் (ஆளவந்தார்) இருப்பதனைக் கண்டேன். எனவேதான் அவரை வணங்கினேன்!'' என்று பெரியநம்பிகள் (மகாபூரணர்) கூறிய பதிலைக் கேட்டு அங்கிருந்தோர் இராமாநுசர்பால் மேலும் மதிப்பும் மரியாதையும் கொள்ளலாயினர்.

ஒருநாள் திருக்கோட்டியூர் நம்பிகள் கதவைச் சாத்திக் கொண்டு வெகுநேரம் தியானத்தில் இருந்தார். தியானம் முடிந்தவுடன் கதவு திறக்கப்பட்டது. இராமாநுசர் நம்பிகளிடம், "தங்களால் ஜபிக்கப்படும் மந்திரம் எது? யாரைத் தியானம் செய்கிறீர்?' என்று கேட்டார்.

"நான் யாமுனாச்சார்யரின் பாதகமலங்களையே தியானித்துவருகிறேன். அவரது திருப்பெயரே நா ஓதிவரும் மந்திரம்!'' என்று நம்பிகள் பதிலளித்தார். திருக்கோட்டியூர் நம்பிகள் தம் குருவிடம் கொண்டுள்ள பக்தியைக் கேட்டறிந்த இராமாநுசர் அன்று முதல் தம் குருநாதராகிய மகாபூரணரையே தெய்வமாக எண்ணி வழிபடலானார்.

சைவ மன்னனது ஆட்சி அப்போது சோழ நாட்டில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இராமாநுசர் இருக்கும் வரை சைவ சமயம் ஏற்றம் பெறாது என்பதை மன்னன் உணர்ந்தான். எனவே, வஞ்சகமாக அவரை வரவழைத்துக் கொன்றுவிடத் திட்டமிட்டான். அதன்படி இராமாநுசரை அழைத்துவர ஏவலர் சிலரை அனுப்பி வைத்தான்.

திருவரங்கம் வந்து சேர்ந்த ஏவலர்கள் அரசனது ஆணையைக் கூறினர். இதையறிந்த கூரத்தாழ்வார் மன்னனின் உள்நோக்கத்தைத் தம் மதிநுட்பத்தால் உணர்ந்து கொண்டார். புறப்பட ஆயத்தமான இராமாநுசரை நோக்கி கூறலானார்:

"எம்பெருமானே! வஞ்சக எண்ணத்துடனேயே மன்னன் தங்களை அழைத்துவர ஆணையிட்டுள்ளான். தேவரீர் உள்ளவரை சைவம் தழைக்காது என்பது தெரியும். எனவே, தங்களை வஞ்சகத்தால் கொன்றுவிட்டால் அடியவர்களாகிய எங்களுக்குப் புகலிடம் தான் ஏது? வைணவத்துக்கு வாழ்வுதான் ஏது? எனவே, தேவரீர் வடிவில் நானே செல்கிறேன். தேவரீர காவியுடையை எனக்குத் தந்தருளும், என் வெள்ளை வேஷ்டியைத் தாங்கள் தரித்துத் திருவரங்கத்தை விட்டு நீங்கி எங்கேனும் தலைமறைவாகி விடும். தாமதிக்காமல் உடனே புறப்பட்டருள வேண்டுகிறேன்! என்று பாசத்துடனும் பதை பதைப்புடனும் கூறிய கூரேசர் சொல கேட்டு உடையவர் உள்ளம் உடைந்தார். பின்னர் ஒருவாறு தேற்றிக்கொண்டு மடத்தைவிட்டுப் புறப்படலானார். கோவிந்தர் முதலான சீடர் பலரும் அவரைப் பின் தொடர்ந்தனர்.

உடையவரின் காவி உடை தரித்துத் திரிதண்டமேந்திக் கமண்டலத்துடன் கூரேசர் தோற்றமளித்தார். கூரேசரையே உடையவர் என்று எண்ணிய சேவகர்கள் அவரை அழைத்துச் சென்றனர். கூரேசருடன் மகாபூரணரும் சென்றார்.

கூரேசரைக் கண்ட சோழ மன்னன் அவரை உடையவர் என்றே நம்பிவிட்டான். நல்லொழுக்கமும் நல்லறிவும் வாய்க்கப் பெற்றவர் என்று மன்னன் உடையவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தான். எனவே தக்க ஆசனம் அளித்து உபசாரம் செய்தான்.

"பெரியவரே! சமய சம்பந்தமாகப் பேசவே உம்மை இங்கே கூட்டி வரச் சொன்னேன். எம் அவைப் புலவர்களுடன் உரையாடி உண்மைப் பொருள் எதுவென்பதைத் தாங்கள் விளக்கியருளல் வேண்டும்'' என்று மன்னன் உடையவரைக் கேட்டுக் கொண்டான்.

"உலகமனைத்துக்கும் உத்தமமான தெய்வம் நாராயணனே!'' என்று கூரேசர் பல்வேறு சான்றுகளுடன் விளக்கம் தந்தார். இதுகேட்ட மன்னன் சீறிச் சினந்து பேசத் தொடங்கினான்.

"காலனுக்குக் காலனான சம்ஹாரக் கடவுளாகிய சிவபெருமானே வரம்பில் ஆற்றல் மிக்கவர். அவரே அனைவராலும் வழிபடத்தக்கவர். வைணவ சமயத்தை இன்று முதல் கைவிட்டுவிடவேண்டும். சிவபெருமானின் சிறப்புக் கூறுபாடுகளை எங்கள் புலவர்கள் உமக்கு விளக்குவார்கள். சைவ சமயத்தை நீர் பின்பற்றவில்லையேல், உமக்கு என்ன கதி ஏற்படும் என்ப

தைப் பின்னர் நீரே அறிந்து கொள்வீர்!" என்று மன்னன் வெகுண்டு கூறினான்.

பின்னர், அரசவைப் புலவர்கள் கூரேசருடன் சமயப்போர் புரிந்தனர். வைணவ சமயத்தின் கோட்பாடுகளைத் தக்க ஆதாரத்துடன் கூரேசர் எடுத்துக் கூறித் தம் சமயத்தின் மேம்பாட்டினை நிறுவினார். தம் உயிர்க்கு இறுதி வரும் என்று அறிந்திருந்தும்கூட அஞ்சாமல் அரச சபையில் கூரேசர் தம் கருத்துக்களை எடுத்து வைத்தார்.

தம் குருவாகிய உடையவருக்காகத் தம் உடல், உயிர், ஆன்மா அனைத்தையும் அர்ப்பணிக்கத் துணிந்த கூரேசரின் குருபக்திக்கு நிகரேது?

அரசனின் அச்சுருத்தலுக்கும், அவைப் புலவர்களின் பரிகாசப் பேச்சுக்கும் அஞ்சாது நின்றார் கூரேசர்! தம் குருவைத் தம் மனத்துள் தியானித்து நின்றார். கூரேசரின் அஞ்சாமையைக் கண்ட மன்னன் சீற்றம் மிகப் பெற்றான். கூரேசரைப் பிடித்துக் கட்டுமாறு ஏவலர்களுக்குக் கட்டளையிட்டான்.

"இங்கே நிற்கும் இவ்விருவர் கண்களையும் பிடுங்கி எறியுங்கள். இவர்களைக் கொல்வதைக் காட்டிலும் இதுவே தக்க தண்டனை! என் கண்முன்னால் இவர்களை நிறுத்தாதீர்கள். இழுத்துச் செல்லுங்கள்!" என்று ஆவேசமாகச் சோழமன்னன் கூறி நின்றான். மன்னனின் மிருகத்தனமான ஆணையைக் கூரேசர் கேள்வியுற்றார். பாவிகளைப் பார்த்த கண்களைப் பாவிகள் பிடுங்குவதற்கு முன் தாமே தம் கண்களை அவித்துக் கொண்டார்.

மன்னனின் ஆணையை நிறைவேற்றச் சேவகர்கள் கூரேசரையும், மகாபூரணரையும் காட்டிற்குள் அழைத்துச் சென்றனர். அங்கே மகாபூரணரின் கண்களைப் பிடுங்கி எறிந்தனர். கூரேசருக்கும் மகாபூரணருக்கும் மேலும் மேலும் பலவித இம்சைகளைச் செய்தனர். எனினும், இவ்விருமகான்களும் சிறிதும் சீற்றம் கொள்ளவில்லை.

ஞானகுருவாகிய இராமானுசரைக் காப்பாற்றிவிட்டோம் என்ற களிப்பே அவர்கள் நெஞ்சில் மிஞ்சியிருந்தது. எனவே தமக்கிழைத்த கொடுமைகளால் அவர்கள் சிறிதும் கலங்கவில்லை.

அளவிடற்கரிய செல்வத்தையும் துச்சமெனத்துறந்த கூரேசருக்கு வேறு என்னதான் தொல்லையைத் தரமுடியும்.

"சேவகர்களே! மன்னனின் சொற்படி நீங்கள் நடந்தீர்கள். பகவானைக் காணவேண்டிய கண்கள் பாவிகளைப் பார்க்க முடியாதவாறு செய்துவிட்டீர்கள். ஆண்டவன் உங்களுக்கு அருள்புரிவீராக!" என்று சேவகர்களை நோக்கிக் கூறினர். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் இவ்விரு சான்றோர்களின் இங்கிதமறிந்து சேவகர் நாணித்தலை குனிந்தனர்.

இன்னருள் புரிந்த இவ்விருவரையும் மேலும் துன்புறுத்தாமல் திருவரங்கத்துக்கே இவர்களை அனுப்பி வைக்கவும் முடிவு செய்தனர். அப்போது அவ்வழியாக வந்த பிச்சைக்காரன் ஒருவனைக் கூப்பிட்டு அவன் கைச் செலவுக்குப் பணமும் தந்து அவர்களைத் திருவரங்கம் சேர்க்குமாறு அனுப்பி வைத்தனர்.

அவ்வாறு திருவரங்கத்துக்கு அவர்கள் திரும்பிச் செல்லுங்கால் வழியிலேயே மகாபூரணர் பரமபதம் அடைந்துவிட்டார்!

கொடுமை செய்த சோழமன்னர் நாளடைவில் கண்டமாலை தோன்றப்பெற்றுக் கழுத்தைக் கிருமிகள் அழித்துக் கொல்லக் கடுந்துன்பமுற்றான்.

**(தொடரும்)**

## ஆவணி - புரட்டாசியில்
## ஆழ்வார்-ஆசார்யர்கள் அவதாரநன்னாட்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | விக்னஸச்சாரியார் | திருவோணம் | 4-09-98 |
| 2. | பெரியவாச்சான்பிள்ளை | ரோகிணி | 12-09-98 |
| 3. | நைநாராச்சான்பிள்ளை | ரோகிணி | 12-09-98 |
| 4. | கோவில் கந்தாடை வாதூல பாவனாச்சார் | அஸ்தம் | 22-09-98 |
| 5. * | திருமலைநம்பிகள் | விசாகம் | 25-9-98 |
| 6. * | வேதாந்த தேசிகர் | திருவோணம் | 1-10-98 |
| 7. | கோவில்கந்தாடை வாதூல அண்ணன் | பூரட்டாதி | 4-10-98 |
| 8. | வானமாமலை ஜீயர் | புனர்பூசம் | 13-10-98 |

* திருமலை திருப்பதி தேவஸ்தானத்தில் கொண்டாடும் நட்சத்திரங்கள்

# கோயில் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் நலவாழ்விற்காக

## நன்கொடை விண்ணப்பம்

கோயில்கள் மக்களுக்கு ஆன்மீக இன்பத்தினை தந்திடுவது மட்டுமன்றி இந்தியக் கலாசாரத்தின், சனாதன தர்மத்தின் பெருமையை விளக்கிடும் வெற்றிச்சின்னங்களாக காலம் காலமாக விளங்கிவருகின்றன.

அர்ச்சகர்களுக்கும் மற்ற ஊழியர்களுக்கும் போதுமான ஊதியம் அளிக்க இயலாமல் போதிய வருவாயும் இல்லாத 20,000க்கும் மேற்பட்ட கோயில்கள் ஆந்திர மாநிலத்தில் உள்ளதென்பது மறைக்க முடியாத செய்தியாகும். பெரும்பாலான கோயில்களில் அர்ச்சகர்களுக்கு அளிக்கும் ஊதியம் கோயிலில் வருகின்ற அற்ப வருவாயின் மீது ஆதாரப்பட்டுள்ளமை வருந்தத்தக்க செய்தியாகும். இதனால் அர்ச்சகர்களும் மற்ற ஊழியர்களும் வறுமையின் காரணமாக அவர்களுடைய பிள்ளைகளுக்குத் தகுந்த அடிப்படைக் கல்வியினைக்கூட அளிக்கமுடியாமல் செலவுகளைத் தாங்கிக்கொண்டு ஏழ்மையில் வாழ்கின்றனர்.

இந்திய உச்சநீதிமன்றத்தின் அறிவுரைப்படி ஆந்திர மாநில அரசு ஒரு குறிப்பிட்ட தொகையினை அதாவது ரூ. 75 கோடி கூட்டுநிதியாக தற்காலிகமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்றும், அத்தொகையினை உயர்ந்த நிலையில் உள்ள கோயில்களிலிருந்தும், மற்றும் அனுமதிக்கப்படும் மற்றைய வழிகளின் மூலமும் பெற்று ஒரு நலவாழ்வு திட்டத்தின் கீழ் இத்தொகையினை அறநிலையத்துறையின் மேற்பார்வையின் கீழ் செயல்படும் கோயில்களில் பணிபுரியும் அர்ச்சகர்கள் மற்றும் இதர ஊழியர்களின் நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்றும் ஆணை பிறப்பித்துள்ளது.

இத்திட்டத்தின்கீழ் கோயிலில் பணிபுரியும் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் குடும்பங்களுக்குத் தகுந்த வீடு, கல்வி மற்றும் ஆகம கல்வி போன்றவையும், மருத்துவ வசதியும், அவர்களுடைய பிள்ளைகளுக்குக் கல்வி வசதியும், அவர்கள் சொந்த வீடு கட்டிக்கொள்ள கடனுதவியும், கூட்டு காப்பீட்டுத்திட்டமும், எதிர்பாராத விபத்திற்கும், இறப்பு முதலானவைக்கும், விதவைகளுக்கு மறுவாழ்வு, காப்பகங்கள் அல்லது அவர்களுக்கு தேவையான பொருளுதவியும், படித்த வேலையில்லாத இளைஞர்களுக்கு பொருளுதவியும் அளிக்க இந்த நலவாழ்வு திட்டம் அமுலுக்கு கொண்டு வரப்படுகிறது. ஆந்திர மாநில அரசாங்கத்தின் விதிமுறைகளின்படி அவ் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழும் மேற்பார்வையிலும் இந்த நிதிதிட்டம் செயல்பட இந்திய உச்ச நீதிமன்றத்தால் அங்கீகரிக்கப்பட்டு இந்திய குடியரசு தலைவர் அவர்களால் 1-6-97-இல் இத்திட்டம் துவக்கி வைக்கப்பட்டது.

இது தொடர்பாக ஆந்திரமாநில அரசு வெளிநாட்டில் மற்றும் இந்தியாவில் உள்ள பல்வேறு நிறுவனங்களிடமிருந்தும் நன்கொடை கோரியுள்ளது. இவற்றிற்கு வருமானவரி விலக்கு கோரி வருமான வரித்துறை மற்றும் இந்திய அரசிடம் மாநில அரசு விண்ணப்பித்துள்ளது.

ஆகையால் அனைத்து அமைப்புகள், நிறுவனங்கள் மற்றும் இரக்க குணமுடைய பொதுமக்கள் அனைவரும் நன்கொடையாக தாராளமாக பொருள் தந்து உதவிடுமாறு ஆந்திர மாநில அரசு கேட்டுக்கொள்கின்றது. நன்கொடை அனுப்புவோர் தொகையினை கேட்பு காசோலையாகவோ அல்லது காசோலையாகவோ "அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்கள் நலவாழ்வு திட்ட நன்கொடை" என்று குறிப்பிட்டு "The Commissioner, Endowment Dept., Govt. of Andhra Pradesh, Hyderabad" எனும் பெயருக்கு எடுத்து அனுப்பவும்.

# திருமலையில் தங்குவசதி நன்கொடைத்திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள்புரியும் வேங் கடவனைக் காண நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் நாள்தோறும் திருமலைக்கு வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில் தங்குவதற்கென்று திருமலை-திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்கள், குடில்கள் (காட்டேஜுகள்) விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்குவசதி கட்டிடங்களைக் கட்டியுள்ளது. ஆனால் நாளுக்குநாள் திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை பெருகிவருவதால் திருமலையில் மேலும் பல குடில்கள், விருந்தினர் விடுதிகள், தர்ம சத்திரங்கள் கட்டுவதென தி.தி. தேவஸ்தான மேலாண்மை முடிவு செய்துள்ளது. யாத்திரிகப் பொதுமக்கள் பயனுறும் இப்புதிய தங்குவசதி கட்டிடங்கள் கட்டுவதில் யாத்திரிகர்களும் பங்குபெறும் வகையில் நன்கொடை அளிப்பதில் தனி நபர்கள் மட்டுமன்றி தனியார் நிறுவனங்களும், வர்த்தக அமைப்புகளும் அறக்குழுக்களும் முன்வந்துள்ளன. அவர்களுக்கு உதவிடும் வகையில் தி.தி. தேவஸ்தானத்தாரின் 'தங்குவசதி நன்கொடைத் திட்டத்தின்கீழ், பின்வரும் கட்டிட வகைகளுக்கு நன்கொடை அளிக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது.

### குடில்கள்

1) திருமலை கருடாத்ரி நகர் குடில்களின் முதல்தளத்தில் சி, டி பகுதிகள் கட்டுதற்கு அளிக்க வேண்டிய நன்கொடை ரூ. 2,25,000 ஆகும். முதல் தளத்தின் கட்டிட அளவு 883 பரப்படிகளாகும். ஒவ்வொரு குடிலும் இரண்டு பகுதிகளைக் கொண்டது. ஒவ்வொரு பகுதியும் (குளியலறைகள் உள்ளடக்கிய) '10 x 10' என்ற அளவு கொண்ட இரண்டு படுக்கை அறைகளைக் கொண்டு விளங்கும்.

### விருந்தினர் விடுதிகள்

'ஸப்தகிரி சத்திரங்கள்' எனும் கட்டிடங்களில் அலக்நந்தா எனும் ஐந்தாவது கட்டிடத்தில் அறைத்தொகுதி ஒன்று கட்டுதற்கான நன்கொடை ரூ. 1,50,000 ஆகும். இக்கட்டிடத்தொகுதிகள் திருமலையில் குடிநீர் வடிகால் இல்லத்திற்கு அருகே உள்ளன. கட்டப்படும் ஒவ்வொரு அறைத் தொகுதியும் 11.7" x 20.6" அளவு கொண்டதாக விளங்கும். மேலும் குளியலறை மற்றும் உடுப்பு அறைகளுடன் உள்ளடக்கி விளங்கும் இவ் அறைகளின் மொத்த பரப்பளவு 342 சதுரடிகளாகும். இக்கட்டிடப் பணி ஒரு வருடத்திற்குள் கட்டிமுடிக்கப்படும்.

திருமலை சுராபுரம் தோட்டத்தில் சிறப்புக் குடில்கள். ஒவ்வொரு தளத்திற்கும் நன்கொ டைத்தொகை ரூ. 5,00,000 ஆகும். இந்த இடம் திருலைக்கோயிலின் வடகிழக்குப் பகுதியில் ஒரு கி.மீ. தூரத்தில் உள்ளது. ஒவ்வொரு தளமும் 1110 சதுர அடிகள் பரப்பளவுகொண்டு இந்தக் கட்டிடம் விளங்குகிறது. ஒவ்வொரு தளமும் குளியலறை மற்றும் உடுப்பு அறைகளை உள்ளடக்கி, 12' x 14' அளவு கொண்ட இரண்டு படுக்கை அறைகள் கொண்டு விளங்கும். இதுதவிர ஒவ்வொன்றும் 12' x 12' என்ற அளவில் கூடிய உணவருந்தும் மற்றும் வரவேற்பு அறைப்பகுதிகளைக் கொண்டு ஓய்வுக்கூடம் ஒன்றுடனும் திகழும். வாகனங்கள் நிறுத்துவதற்கான வசதிகளுடன் கூடிய இக்கட்டிடம் ஒரு வருடத்திற்குள் கட்டப்படும்.

### வழிமுறைகள்

நன்கொடையாளர்கள் ஒரு வெள்ளைத்தாளில், கட்டுதற்கு விருப்பமான குடில்களின் விவ ரங்களைக் குறிப்பிட்டு, குடில்கள் / அறைத்தொகுதிகள் ஆகியவற்றிற்குச் செலுத்த வேண்டிய நன்கொடைத் தொகையினை, (திருப்பதியில் பெறும் வகையில்) 'Executive Officer, T.T. Devasthanams' எனும் பெயரில் ஒரு தேசிய வங்கி காசோலை மூலமாக பெற்று அதனை "செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி-517501" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப்போக்குவரத்து ஆங்கிலத்தில் அமைதல் நலம். நன்கொடையினை தனிநபரோ/இருவர் இணைந்தோ/தனியார் நிறுவனங்களோ/ வர்த்தக அமைப்புகளோ வழங்கலாம். குடில்கள்/அறைத் தொகுதிகள்/தளங்கள் யாவும் நன்கொடையாளர்களுக்கு வரிசைக்கிரமமாக ஒதுக்கப்படும்.

### நன்கொடையாளர்களுக்கு சலுகைகள்

நன்கொடையாளர்கள் ஒருமுறை தங்கும்போது தொடர்ந்து 10 நாட்களுக்கு மிகாமல், மொத்தத்தில் வருடத்தில் இலவசமாக 60 நாட்களுக்கு தங்கள் தங்குவசதிகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதுபோது அவர்கள் பராமரிப்புக் கட்டணம் மட்டுமே செலுத்துதல் வேண்டும். இந்த வசதியினை தனிநபர் நன்கொடையாளர் மட்டுமே அவர்தம் ஆயுட்காலத்தில் அவரோ, அவ ரது துணைவியாரோ அல்லது அடுத்த வாரிசுதாரரோ பயன்படுத்திக்கொள்ள முடியும். இருவர் இணைந்தது/தனியார் நிறுவனம்/ வர்த்தக அமைப்பு/அறக்கட்டளை போன்ற நன்கொடையாளர்கள் 20 ஆண்டுகளுக்கு இலவசமாக தங்கள் நன்கொடை தங்கு வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ளலாம்.

நன்கொடைகளின் பெயர் மற்றும் ஊர் விவரம் ஒருவர் பெயரில் நினைவுச்சின்னமாக கற்பலகை ஒன்றில் பொறிக்கப்பட்டு நன்கொடை பெறப்பட்ட குடில்களின் முன் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். மேற்படி இக்குடில்கள்/அறைத்தொகுதிகள் போன்றவற்றிற்கு வழங்கப்படும் நன்கொடைத் தொகைகளுக்கு எந்தவிதமான வருமானவரி விலக்கும் அளிக்கப்படமாட்டாது.

செயலாட்சித் தலைவர், திருமலை திருப்பதி தேவஸ்தானம்.

